# ஸப்தகிரி

விலை ரூ. 4/-

டிசம்பர், 1996



திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



ஓம் பார்த்தாய ப்ரதிபோதிதாம் பகவதா நாராயணேன ஸவயம்
வ்யாஸேன க்ரதிதாம் புராணமுநினா மத்யே மஹாபாரதம் ।
அத்வைதாம்ருதவர்ஷிணீம் பகவதீம் அஷ்டாதசாத்யாயிநீம்
அம்ப த்வாம் அனுஸந்ததாமி பகவத்கீதே பவத்வேஷிணீம் ॥

ஓம்! தாயே, பகவத்கீதே, சாக்ஷாத் பகவான் நாராயணனால் பார்த்த னுக்கு உபதேசிக்கப்பெற்றவள், புராண முனியாகிய வியாசரால் மகாபா ரதத்தின்கண் அமைக்கப்பெற்றவள், அத்வைத அமிர்தத்தை வர்ஷிப்பவள், பிறவிப் பிணியைப் போக்குபவள், பதினெட்டு அத்தியாயங்களையுடைய வள் ஆகிய பகவதீ, உன்னைத் தியானிக்கிறேன்.

(கீதா தியான சுலோகம்)

# ஸப்தகிரி

டிசம்பர் - 1996


மலர் 27 இதழ் 7

தனிப்பிரதி ரூ. 4/- வருடச்சந்தா 48/-




## உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீ ஆண்டாள் - சித்திரம்: உமாபதி

பின்னட்டை : ஆண்டாள் திருக்கோயில்-ஸ்ரீவில்லிபுத்தூர்.

முதல் உள்ளட்டை : கருட வாகனத்தில் ஸ்ரீபத்மாவதி தாயார்

2வது உள்ளட்டை : சரஸ்வதி கோலத்தில் ஸ்ரீபத்மாவதி தாயார்

--திருச்சானூர் பிரம்மோத்ஸவத்தின்போது

JAGADISH

## உங்களுடன்...

இறைவன் மனிதனாகலாம். மனிதன் இறைவனாக முடியாதா? முடியும். மனிதன் அறிவை உலகாயுத ஆசைகளுக்காகப் பயன்படுத்துவதை விடுத்து, என்றும் எங்கும் பரந்துள்ள அப்பரமன் திருவடிகளை நினைந்து மற்றைய உயிர்களிடத்து அன்பு, கருணை, தியாகம் போன்ற இறைப்பண்பு களைக் கொண்டு செயல்படும்போது. இறைவனானவன் அறிவுள்பொருள், அறிவற்ற பொருள்களோடு கூடிய பரம்பொருளாவான். மனிதனோ அறி வுள்ள பொருள். பரம்பொருள் தன்னுடைய சொத்தான அறிவுள்பொருளை நல்வழிப்படுத்த மண்ணில் அவ்தரித்து, மானைக்காட்டி மானைப்பிடிப்பா ரைப்போலே மனித உருக்கொண்டு தோற்றமளிக்கிறுன். இதுவே விபவம் என்கின்ற அவதார நிலையாகும். அவதாரங்கள்தோறும் ஆன்மாக்களை வாரிப்பிடியாக எடுத்துச்செல்ல ஆவல் கொள்கிறுன் இறைவன். ஆனால் அவற்றில் சிக்குவன சில ஆன்மாக்களே. மனிதன் ஏனோ தன்னிலை அறியாமல் அவனியிலே ஆசைகளுக்கு அடிமையாகி அல்லலுற்று பாவ, புண்ணியங்களை மூட்டைக்கட்டிக் கொண்டு முறையே நரகத்திற்கும் சொர்க்கத்திற்கும் சென்று மீண்டும் இவ்வுலகிற்கு திரும்புகிறுன். இத னையே பொய்யாமொழிப் புலவர் "பிறவிப்பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடிச் சேராதார்" என்கிறுர் போலும்.

கீதையில் கண்ணபிரான் "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ: । அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: ॥" என் கிறபடியே பேற்றுக்காரணமான எல்லாத் தர்மங்களையும் (வாசனையுடன்) விட்டு, என்னை ஒருவனையே உபாயமாக உறுதிகொள் நான் எல்லா பாபங்களிலிருந்தும் உன்னை விடுவிக்கிறேன் வருந்தாதே" என்று உபதே சித்தும் மனிதன் ஏன் இன்னும் உணராமல் இருக்கிறுன்! ஆம் அவனுக்கு உணர்வதற்கு வாய்ப்பு இல்லை. பிறவிக் கடலில் மூழ்கியிருக்கிறுன். மூழ்கியவன் கரையேறுவது கடினம்தான். வாழ்க்கை ஒரு போராட்டம் - போராடு, வாழ்க்கை ஒரு விளையாட்டு - விளையாடு, வாழ்க்கை ஒரு நாடகம் - நடி என்கிறது மனிதனின் மனம். மனிதன் மனதினை சிறிது நேரமாவது இறைஅநுபவத்தில், பக்தியில் திசை திருப்பினால் வாழ்க்கை ஒளிவீசுவதாக அமையும். பிஞ்சிலே பழுத்த ஆண்டாள் மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழமாட்டாத தன்மையளாய் கண்ணனோடு கலக்க ஆவல் கொண்டாள். அதன் காரணமாக திருப்பாவை என்கின்ற பக்திப் பனுவலை நோன்பு என்கின்ற போலிக்காரணம் கொண்டு பாடினாள். திருப்பாவை ஆண்டாளின் அமுதவாக்காக தோன்றியதன் முதன்மை நோக்கம் "ஸ்ரீமந் நாராயணனே வீடுபேற்றையளிப்பவன்" என்பதையும், 'நாம சங்கீர்த்தனத்தின் மூலம் இறைவனின் திருவருளைப்பெற முடியும்' என்பதையும் உறுதிப்படுத்துவதாகும். கண்ணபிரான் திருத்தேர்த்தட்டில் அமர்ந்து அர்ஜுனனுக்கு உபதேசம் செய்வதை ஒரு போலிக்காரணமாக

கொண்டு, அனைத்து உலகுக்கும் கீதோபதேசம் செய்தது போல, ஆண்டாளும் ஆய்ப்பாடிச் சிறுமியருடன் சேர்ந்து நோன்பு நோற்பதை ஒரு போலிக்காரணமாகக்கொண்டு உலக•மக்கள் அனைவரும் அறிந்து உய்யுமாறு இவ்விரண்டு இலட்சியங்களைக்கொண்ட திருப்பாவைப் பிரபந்தத்தை அருளியிருக்கிறாள்.

திருப்பாவைக்கும் கீதைக்கும் ஒற்றுமையிருப்பதினாலே "மாஸானாம் மார்கசீர்ஷோऽஹம்" என்கிறபடியே 'மாதங்களில் நான் மார்கழி ஆகிறேன்' என்று கண்ணன் அருளியபடியே பாவையும் கீதையும் மார்கழி மாதத்திலே வெளிவந்துள்ளன. மார்கழி மாதமோ அதிகமான வெப்பமும் அதிகமான குளிரும் இல்லாத மாதமாகும். இம்மாதத்திலே எல்லாப் பொருள்களும் அங்குரிக்கும். அங்குரிக்கையாவது பயனை உண்டு பண்ணுவதும் வேண்டியவற்றை பெறக்கூடிய மாதமுமாகும். ஆக இம்மாதம் ஒரு புனிதமான மாதம். இம்மாதத்தில் கீதையையும் திருப்பாவையையும் மனனம் செய்வதால் சிறந்த நன்மை பயக்கும் என்பதில் ஐயமில்லை. பகவத்கீதையில் "அத்வேஷ்டா ஸர்வ பூதானாம் மைத்ர: கருண ஏவ ச । நிர்மமோ நிரஹங்கார: ஸம து:க ஸுக: க்ஷமி ॥" என்கிற சுலோகம் மூலமாக 'உயிர் அனைத்திடத்தும் வெறுப்பில்லாமல் நட்பும் கருணையும் உடையவனாயும் அகங்காரம் மமகாரம் அற்று இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதுபவன் என் பக்தனாகிறான். அவன் எனக்குப் பிரயமானவனாகிறான்' என்று உரைத்த வண்ணம் திருப்பாவை அமைந்துள்ளது. "அங்கண் மா ஞாலத் தரசர் அபிமான பங்கமாய் வந்து நின் பள்ளிக்கட்டில் கீழே" என்கின்ற திருப்பாவை பாடலில் 'அபிமான பங்கம்' என்பதற்கு அரசர்கள் தங்களுடைய அகங்காரங்களை விட்டு வந்ததாக பாவை பகர்வதை உரையாசிரியர் கூறுவர். ஆண்டாளுக்கு கண்ணன்மீது பக்தியானது சிறுவயதிலிருந்து ஏற்பட்டது. "பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:" என்று இராமாயணத்தில் இளைய பெருமாள் சிறுவயது முதல் கொண்டே தன் தமையனான இராமனிடத்தில் எப்போதும் மிகவும் அன்பு பூண்டவனாக இருந்தானோ அதைப் போன்று ஆண்டாள் கண்ணன் மீது பக்திகொண்டிருந்தாள். திருமழிசை பிரான் "தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்று கூறியபடியே தம் வாழ்க்கையை நடத்திக்காட்டினார். அந்த அளவிற்கு இறைபக்தி இந்த நவீன உலகத்தில் இல்லாவிட்டாலும் வருடத்திற்கு ஒரு முறையாவது மார்கழி மாதத்திலே பக்தியுடன் நோன்பு நோற்கிறார்கள் மக்கள். இம்மாதத்திலே தினந்தோறும் காலையில் குள்ளக்குளிர குடைந்து நீராடி கீதை காட்டிய வழியில் அமைந்துள்ள திருப்பாவை முப்பது பாடல்களையும் பாடி செங்கண் திருமுகத்துச் செல்வத்திருமாலால் எங்கும் திருவருள் பெற்று இன்புறுவோமாக



# செய்திச் சுருக்கம்

### புஷ்ப யாகம்

கார்த்திகை மாதத்து ஸ்ரவண நட்சத்திர நாளான 17-11-97 அன்று திருமலையில் 'புஷ்ப யாகம்' - எனும் கோயில் நிகழ்ச்சி வெகுச்சிறப்பாக நடைபெற்றது. இது சம்பந்தமாக அங்குரார்ப்பண நிகழ்ச்சி 16-11-97 அன்று மாலை நடைபெற்றது. அடுத்தநாள் மதியம் ஸ்ரீதேவி, ஸ்ரீபூதேவி உடன் எழுந்தருள ஸ்ரீமலையப்பசுவாமி எனும் உத்ஸவ மூர்த்தியானவர் சுமார் 3000 கிலோ கிராம் எடையுள்ள பல வண்ண மலர்களால் அர்ச்சிக்கப்பட்டார். அன்று காலை உத்ஸவ மூர்த்திகளுக்கு அபிஷேக நிகழ்ச்சிகளும் கோயில் வளாகத்தில் ஹோமங்களும் நடைபெற்றன. அன்று மதியம் துளசி, மருவம், ரோஜா, முல்லை, செண்பகம் போன்ற இருபது வகை மலர்களால் உத்ஸவர் அர்ச்சிக்கப்பட்டார். அன்று மாலை, திருமலை மாட வீதிகளில் உத்ஸவ மூர்த்திகள் திருவீதிவலம் மேற்கொண்டு, பக்தர்களுக்கு அருள் பாலித்தனர். இந்த சேவையில் 196 கிருஹஸ்தர்கள் தலா ரூ. 3500/- செலுத்தி பங்கேற்றனர். இதுபோது தி.தி. தேவஸ்தான உயர் அலுவலர்கள் பங்கேற்க தி.தி. தேவஸ்தான தோட்டத்துறை கண்காணிப்பாளர் திரு. நாதமுனி ரெட்டி அவர்கள் மேலாண்மையால் பொன்னாடைப் போர்த்தப்பட்டுக் கௌரவிக்கப்பட்டார்.

* * * *

### புதிய ஆணையர்

தி.தி. தேவஸ்தான முன்னாள் செயலாட்சித் தலைவர் திரு. எம்.வி.எஸ். பிரஸாத், ஐ.ஏ.எஸ். அவர்கள் ஆந்திர மாநில இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறையின் ஆணையராக நியமிக்கப்பட்டுள்ளார். இதனால் தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுவில் பதவிசாரா உறுப்பினராகவும் செயல்படுவார்.

* * * *

### நிதியுதவி

ஆந்திரமாநிலத்தைச் சார்ந்த சில மாவட்டங்கள் அண்மையில் ஏற்பட்ட புயலினால் பெரிதும் பாதிப்புக்குள்ளாகி, பெரும் பொருள் மற்றும் உயிர் சேதத்திற்குள்ளாகின. பாதிக்கப்பட்ட மாவட்டங்களுக்கு உதவிடும் வகையில், தி.தி. தேவஸ்தானம் தன் பங்காக ஆந்திர மாநில அரசுக்கு ரூ. 2/- கோடி நிதி உதவி அளித்துள்ளது.

* * * *

### கைசிக துவாதசி ஆஸ்தானம்

திருமலையில் 22-11-97 அன்று கைசிக துவாதசி ஆஸ்தானம் மிகச்சிறப்பாக நடைபெற்றது. இதுபோது திருமலைக்கோயில் கருவறையில் இருக்கும் 'ஸ்ரீ உக்கர ஸ்ரீநிவாசர்' என்றழைக்கப்படும் உத்ஸவமூர்த்தியை பொழுது புலரும் முன்பேயே 'ஸர்வ பூபால' வாகனத்தில் எழுந்தருளிச் செய்து திருமலை நான்கு மாடவீதிகளில் வீதிவலம் மேற்கொள்ளப்பட்டு, பின்னர் ஆஸ்தான மண்டபத்தில் பக்தர்களுக்கு அருள் பாலித்தார். இதுபோது மேற்கொள்ளப்பட்ட ஆஸ்தான நிகழ்ச்சிகள் ஸ்ரீமாடம்பாக்கம் ஸ்ரீநிவாச பட்டாசாரியார் மேற்பார்வையில் நடைபெற்றன.

* * * *

### உண்டியலில்...

அடையாளம் காட்டிக் கொள்ளாத பக்தர் ஒருவர் 13-11-97 அன்று உண்டியில் தன் காணிக்கையாக ரூபாய் ஒரு லட்சத்தினைச் செலுத்தினார்.

* * * *

### காணிக்கை

ஸ்ரீஅஹோபில மடத்தின் ஸ்ரீஸ்ரீ நாராயண யதீந்திர மஹாதேசிகர், திருமலைக்கோயில் தினசரி பூஜைகளுக்காக வெள்ளிப்பாத்திரங்களை அண்மையில் இலவசமாக வழங்கினார். இதுபோது சுவாமிகள் பேசியபோது ரூ. 2 இலட்சம் பெறுமான ஸ்ரீலக்ஷ்மி நரசிம்ஹ மாலை எனும் ஆபரணத்தை ஏழுமலையானுக்குத் தன் மடம் விரைவில் வழங்க இருப்பதாகக் குறிப்பிட்டார்.

* * * *

### மற்றையச் செய்திகள்

திருமலைக்கோயிலுக்குள் 'குலசேகரபடி'க்கு பொன்தகடு வேயப்படும். அதுபோலவே ராமர் மேடைக்கு அருகு உள்ள கற்தூண்கள் யாவும் பொற்தகடுகளால அலங்கரிக்கப்படும். மேலும் கருவறை வாயிலை காத்திடும் ஜெய, விஜய உருவத்திருமேனிகள் பொற்றுடைகளால் அலங்கரிக்கப்படும். கோயிலுக்குள் இருக்கும் தங்கக்கிணற்றினை இஸ்ரேல்நாட்டு தொழில்நுட்ப உதவியுடன் விரைவில் சுத்தப் படுத்தப்படும்.

* * * *

(தொடர் கட்டுரை)

# ஸஹஸ்ர நாமம்

திரு. T.S. இராஜகோபலன் - சென்னை.

காமதேவ: காமபால:
காமீ காந்த: க்ருதாகம: ।
அநிர்தேச்ய வபுர் விஷ்ணு:
வீரோऽநந்தோ தநஞ்ஜய: ॥ (70)

**657.** காமதேவ: - விருப்பங்களை அளிப்பவன். சங்கராலய க்ஷேத்ரத்தில் காமதேவன் என்ற திருநாமம் ஏற்று, அப்ஸரஸ்ஸுகளால் வணங்கப்பெறுவோன்.

**658.** காமபால: - தான் அளிப்பவனவற்றைத் தானே பரிபாலிப்பவன்.

ஊழிதொறும் தன்னுள்ளே
படைத்துக்காத்து (10-7-9)

**659.** காமீ: - சிறந்த பலன்களை அளிப்பதாலே, தன்னிடம் புருஷார்த்தங்களை விரும்புமாறு விளங்குவோன்.

என்கண் பாசம் வைத்த பரஞ்சுடர்ச்
சோதிக்கே (3-3-4)

[என்கண்-என்னிடம்]

**660.** காந்த: - எல்லைக் கடந்த அழகு வாய்ந்து மனத்துக்கு இனியனாக இருப்பவன்.

மாசறு சோதி என் செய்ய வாய்
மணிக்குன்றத்தை (5-3-1)

[மாசு-குற்றம், அறு-நீங்கிய. செய்ய-சிவந்த]

## 26. சக்தீசாவதாரம்

### 26.1 பெருமை

**661.** க்ருதாகம: - மந்த்ரங்கள், வித்யைகள் இவற்றை வெளியிட்ட சக்தீசன்.

சமய நீதி நூல் என்கோ? (3-4-6)

[நூல்-நூல்களை வெளியிட்டவன்.]

**662.** அநிர்தேச்யவபு: - அந்த அந்த யுகத்திற்கேற்பத் திருமேனி வாய்ந்திருப்பதால், இது என்னது என்று விவரிக்க இயலாதவாறு திருமேனி கொள்பவன்.

பல பலவே சோதி வடிவு (2-5-6)

**663.** விஷ்ணு: - இவ்வாறு தனது நியமன சக்தியுடன் எங்கும் பரந்திருப்பவன்.

எம்பிரான் விட்டுவே (2-7-5)

**664.** வீர: - அன்பர்களைக் காப்பதற்காக, இவர்களது பகைவர்களை திவ்யாயுதம் கொண்டு தகைப்பவன்.

அசுரர் குழாம் தொலைப்பெய்த
நேமி எந்தாய்! (தி.விரு. 90)

**665.** அநந்த: - தேசம், காலம், பொருள் இவற்றால் யாதொரு அளவுமின்றி இருப்பவன்.

தளர்வின்றியே என்றும் எங்கும் பரந்த
வளரொளி ஈசனை மூர்த்தியை (3-10-10)

**666.** தநஞ்ஜய: - யாவகைச் செல்வமும் வாய்ந்தவன் ஆதலால் தனம் வேண்டும் என்ற ஆசை இல்லாதவன்.

கொள்ளக் குறைவு இலன் (3-9-5)
இலன் அது, உடையன்இதுஎன நினைவரியவன்
(1-1-3)

[அது இல்லை, இதுதான் உண்டு என்று நினைப்பதற்கில்லை, செல்வம் நிறைந்திருப்பதால்]

ப்ரஹ்மண்யோ ப்ரஹ்மக்ருத் ப்ரஹ்மா
ப்ரஹ்ம ப்ரஹ்மவிவர்தந: ।
ப்ரஹ்ம வித் ப்ராஹ்மணோ ப்ரஹ்மீ
ப்ரஹ்மஜ்ஞோ ப்ராஹ்மணப்ரிய: ॥ (71)

**667.** ப்ரஹ்மண்ய: - ப்ரக்ருதி, ஜீவாத்மாக்கள் இவற்றின் நிலை, போகங்கள் போன்றவற்றிற்குக் காரணமானவன்.

...இனிய நல்வான்சுவர்க்கங்களுமாய்
...மன்பல்லுயிர்களுமாய்...இன்புறும் இவ்
விளையாட்டுடையானை (3-10-7)

**668.** ப்ரஹ்மக்ருத் ப்ரஹ்மா - பெரியதான உலகைப் படைக்கும் பிரமனையும் நியமிப்பவன்.

...நான்குமுகத்தான், நின் உந்திமுதல்
(பெ.திரு. 71)

**669.** ப்ரஹ்ம - குணங்களாலும் செல்வத்தாலும் மேம்பட்டவனாய், வேதங்களால் விளக்கம் பெறும் பரம்பொருள்.

வேதனை, வெண்புரிநூலனை, விண்ணோர்
பரவநின்ற நாதனை (தி.விரு. 79)

[வேதன்-வேதங்களால் புகழப்படுவோன்]

**670.** ப்ரஹ்மவிவர்த்தந: - இவ்வாறு வளரும் ப்ரபஞ்சத்திற்கு ஆதிகாரணமான தவம் முதலிய தர்மங்களை வளர்ப்பவன்.

**671.** ப்ரஹ்மவித் - ப்ரஹ்த்திற்கு வாசகமாகையாலே, ப்ரஹ்மம் எனப்பெறும்வேதம் முழுதும் நன்கறிந்தவன்.

மெய்ஞ்ஞான வேதியனை (3-1-11)

**672.** ப்ராஹ்மண: - வேதார்த்தை உலகில் நிலைநிறுத்துவதற்காக தத்தாத்ரேயன் என்னும் ப்ராஹ்மணனாக அவதரித்தவன்.

**673.** ப்ரஹ்மீ - இவையாவும் தானேயாய் விளங்குவதால் பெருமையுடையவன்.

கலைப்பல் ஞானத்து என் கண்ணனை (3-2-10)
பெருமையுடைய பிரானார் (1-6-9)

**674.** ப்ரஹ்மஜ்ஞ: - வேத வேதாந்தங்களை நன்கு அறிந்தவன்.

பண்புடைய வேதம் பயந்த பரனுக்கு
(6-6-5)

வேதியர் முழுவேதத்தமுதத்தை (3-3-6)
நாரணன்....வேதமயன் (2-7-2)

**675.** ப்ராஹ்மணப்ரிய: - வேதங்கள் வல்லவரிடம் அன்பு கொள்வோன்.

வேத வேள்வி ஒலி முழங்கும்

திருவண்வண்டூர்....நாதன் (6-1-2)

## 26.2 உய்விக்கும் வகை

மஹாக்ரமோ மஹாகர்மா
மஹாதேஜா மஹோரக: |
மஹாக்ரதுர் மஹாயஜ்வா
மஹாயஜ்ஞோ மஹாஹவி: ‖ 72 ‖

**676.** மஹாக்ரம: - யாவரும் தன்னை அடைந்து உய்வதற்குப் படிக்கட்டாக விளங்குவோன்; தன்னை அடைவதற்கான ஆசையையும் அன்பையும் வளர்ப்பவன்.

ஆற்ற நல்ல வகை காட்டும் அம்மானை (4-5-5)

**677.** மஹாகர்மா - பூச்சி புழுக்கள் போன்ற அற்ப ஜந்துக்களும் தன்னை அடைந்து அனுபவிக்குமாறு உயர்ந்த நிலைக்குக் கொண்டுவரும் பெருமை கொள்பவன்.

சராசரம் முற்றவும் நற்பாலுக்கு
உய்த்தனன் (7-5-1)

**678.** மஹாதேஜா - மக்களிடம் இருளை (அறிவின்மையை) ஒழிக்குமாறு பேரொளி வாய்ந்தவன்.

வளர்ஒளி மாயோன் (2-10-1)

சோதியாகி எல்லா உலகும் தொழும்
ஆதிமூர்த்தி (3-3-5)

**679.** மஹோரக: - (எவ்வாறு எனில்) மிகப்பெரியவனாக இருந்தும் அன்பர்களது உள்ளத்திலும் நுழைந்திருப்பவன்.

நீஎன், செவியின் வழி புகுந்து
என்னுள்ளாய் (பெ.திரு. 75)

**680.** மஹாக்ரது: - மிக எளிய வகையில் ஆராதனம் செய்து இவனை அனுபவிக்கலாம்.

நல் நீர்தூய் புரிவதுவும் புகைபூவே(1-6-1)

[நல்நீர்-பரிமளம் சேர்க்காமல் அன்பாலே வழங்கும் தண்ணீர்.]

**681.** மஹாயஜ்வா - இவ்வாறு அன்பினாலே ஆராதனம் செய்வோரைப் பெற்றவன்.

செந்தொழிலவர் வேதவேள்வி அறாச்
சிரீவரமங்கலநகர், அந்தமில்புகழாய்
(5-7-7)

**682.** மஹாயஜ்ஞ: - தன்னை ஆராதிப்பது, யாவற்றிலும் மேம்பட்டதாகத் திகழ்வோன்.

திருந்து வேதமும் வேள்வியும்....மலிந்திருந்து
வாழ்... தொலைவில்லிமங்கலம் (6-5-8)

683. மஹாஹவி: - ஆத்மா என்ற சிறந்த ஹவிஸ்ஸை ஏற்றுக்கொள்பவன்.

என்னுடை ஆருயிரேயோ? (8-1-4)

ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய: ஸ்தோத்ரம்
ஸ்துத: ஸ்தோதா ரணப்ரிய: ।
பூர்ண: பூரயிதா புண்ய:
புண்யகீர்த்தி ரநாமய: ॥ 73 ॥

[இதுவரையில் மனத்தாலும் சரீரத்தாலும் ஆராதிப்பது விவரிக்கப்பெற்றது. இனி வாக்கால் ஆராதிக்கப்படுவது விவரம் பெறும்.]

684. ஸ்தவ்ய: - துதிப்பதற்கு ஏற்றவன்.

புகழும் நல் ஒருவன் என்கோ? (3-4-1)

[புகழும்: வேதங்களாலும் வேதம் வல்லவர்களாலும்.]

685. ஸ்தவப்ரிய: - எவராலும் எவ்வகையிலும், எந்த மொழியிலும் (பிழைகளுடன்) துதித்தாலும் விரும்பி ஏற்றுக்கொள்ளும் இயல்புடையவன்.

கையார் சக்கரத்து என் கருமாணிக்கமே என்றென்று,
பொய்யே கைம்மை சொல்லிப், புறமே புறமே ஆடி
மெய்யே பெற்றொழிந்தேன் (5-1-1)

[துதிப்பதாகப் பாசாங்கு செய்தேன், ஆனால் அருள்பெற்றேன். பொய்யே கைம்மை சொல்லி உள்ளத்தில் சிறிதும் அன்பில்லாமல் பொய்யே சொல்லி அழைத்து.]

686. ஸ்தோத்ரம் - இவ்வாறு துதிப்பது தனது அருளாலேயாதலால் இந்தத் துதியும் தானாகவே விளங்குவோன்.

என் நாமுதல் வந்து புகுந்து, நல் இன்கவி தூமுதல்
பத்தரிக்குத் தான் தன்னைச் சொன்ன என் வாய் முதல்
அப்பன் (7-9-8)

687. ஸ்துத: - ஆயிரம் நாவுடை ஆதிசேஷன் முதல் பூமியிலுள்ளோர் வரையில் யாவராலும் துதிக்கப் பெறுவோன்.

ஏத்தும் நங்கட்கும் அமரர்க்கும்
முனிவர்க்கும் இன்பன் (10-1-6)

688. ஸ்தோதா - தன்னைத் துதிப்பவர்களைத் தானும் துதிப்பவன்.

## 26.3 காப்பாற்றும் வகை

689. ரணப்ரிய: - தனது அன்பரைக் காப்பதற்காக, அசுரர் அரக்கர்களோடு போர் செய்வதில் விருப்பமுடையவன்.

ஐவர்க்காக் கொடுஞ் சேனை தடிந்து (7-6-10)
பார்மல்கு சேனை அவித்த பரஞ்சுடரை (3-5-7)

690. பூர்ண: - விருப்பங்கள் யாவும் நிறைவேறப் பெற்றவன். அவாப்த ஸமஸ்த காமன்.

சிறந்த கீர்த்தித் திருக்குறுங்குடி
நம்பியை (5-5-7)

[நம்பி-பூர்ணன்]

691. பூரயிதா - இவ்வாறு பூர்ணனாயினும், குறைவுடையவன்போல், அன்பரது துதியை விரும்பி, அவர்களது விருப்பத்தை நிறைவேற்றுவோன்.

என் சொல்லால், நான் சொன்ன
இன்கவி என்பித்து (7-9-2)

692. புண்ய: - பாவிகளையும் புண்ணியராக்கும் பரிசுத்தன்.

கொள்மின் இடர்கெட உள்ளத்துக்
கோவிந்தன் (8-6-7)

693. புண்யகீர்த்தி: - தன்னைப் பற்றிக் கீர்த்தனம் செய்வதால், பாவங்கள் எல்லாம் அகலுமாறு மேன்மையுடையவன்.

அழிவில்லா ஆயிரத்து இப்பத்தும்
நோய் அறுக்குமே (9-7-11)

[நோய்-பெருமானைப் பிரிந்து வருந்துவது.]

அமைபாட்டு ஓர் ஆயிரத்து இப்பத்தால்
அடிசூட்டலாகும் அந்தாமமே (2-4-11)

[அம் தாமம்-அழகிய மாலை, அடி-திருவடிகளில்; சூட்டலாகும்.]

694. அநாமய: - பிறவி என்னும் நோய்க்குப் பகைவன்.

வினையேன், வினை தீர்மருந்தே! (7-1-4)

மனோஜவஸ் தீர்த்தகரோ
வஸுரேதா வஸுப்ரத: ।
வஸுப்ரதோ வாஸுதேவோ
வஸுர் வஸுமநா ஹவி: ॥ 74 ॥

**695.** மநோஜவ: - அன்பர்களது விருப்பத்தை முடிப்பதில் மநோவேகம் மிக்கவன்; விரைவில் செய்பவன்.

*கடிவார் தீய வினைகள், நொடியாரும்*
*அளவைக்கண்* (1-6-10)

[நொடியளவில் போக்குவார்.]

**696.** தீர்த்தகர: - தன்னைப் போல் பரிசுத்தம் செய்யக்கூடிய கங்கை முதலான தீர்த்தங்களுக்குத் தூய்மை அளிக்கும் காரணபூதன், கடல்போல் படர்ந்த பெருமையுடைய தன்னை அன்பர் அனுபவிக்குமாறு பலதுறைகளாக இலங்குவோன்.

*வணங்கும் துறைகள் பலபலவாக்கி... அவையவை-தோறு, அணங்கும் பலபலவாக்கி, நின்மூர்த்தி பரப்பி வைத்தாய்* (தி.விரு. 96)

## 27. க்ருஷ்ணாவதாரம்

### 27.1 அவதாரப் பெருமை

**697.** வஸுரேதா - தனது சோதியே உபாதாந காரணமாக அவதரித்த, வஸு எனப்பெறும் சோதி மயமானவன்.

*ஆதியஞ் சோதியை அங்கு வைத்து,*
*இங்குப் பிறந்த வேத முதல்வனை* (3-5-5)

[அங்கு வைத்து இங்குப் பிறந்த-பரமபதத்தில் இருப்பது போல் சோதி இங்குவைத்து; சோதி சிறிதளவும் குறையாமல்.]

**698.** வஸுப்ரத: - பரமநிதியான தன்னைத் தேவகிக்கும் வஸுதேவருக்கும் தந்தவன்.

**699.** வஸுப்ரத: - இவர்களுக்கு இந்த மேன்மையை (செல்வத்தை) அளித்தவன். [வஸு-செல்வம், மேன்மை.]

**700.** வாஸுதேவ: - வஸுதேவரது குமாரனாக அவதரித்தவன்.

**701.** வஸு: - அவதாரத்திற்குக் காரணமாகத் திருப்பாற்கடலில் பள்ளி கொள்பவன்.

*பயில இனிய நம் பாற்கடல் சேர்ந்த*
*பரமனை* (3-7-1)

**702.** வஸுமநா: - இந்தப் பாற்கடலில் துயிலமர்ந்தும் வஸுதேவரிடம் திருவுள்ளம் சேர்ந்தவன்.

**703.** ஹவி: - வஸுதேவனிடமிருந்து நந்தகோபனிடம் விருந்தாகச் சேர்ந்தவன்.

*பூண்டு, அன்று அன்னை புலம்பப் போய்*
*அங்கு ஓர் ஆய்க்குலம் புக்கதும்* (6-4-5)

### 27.2 சான்றோர்க்குப் புகல்

ஸத்கதி: ஸத்க்ருதி: ஸத்தா
ஸத்பூதி: ஸத்பராயண: ।
சூரஸேநோ யதுச்ரேஷ்ட:
ஸந்நிவாஸ: ஸுயாமுந: ॥ 75 ॥

**704.** ஸத்கதி: - அவதரிக்கும் போதே பெற்

<u>தெரிந்து கொள்ளுங்கள்</u>

### பேரீச்சை மரம்

எவ்வளவு பெரிய மனிதனாக இருந்தால் என்ன? வழிப்போக்கனுக்கு நிழல் தராமல் எளிதில் பறித்து உண்ணவும் வகையில்லாமல், பழத்தைக் குலை குலையாகச் சுமந்து நிற்கும் பேரீச்சைமரம் போல் இருந்து என்னபயன்?

கொடுக்கும் குணமுடையவனே உயர்ந்தவன். பிறருடைய துயரங்களை உணர்ந்து தானே உதவிசெய்ய முன் வருகிறனோ அவன் உயர்ந்தவன். மற்றவர்களது துயரங்களை உணரமுடியாதவன்தான் நாஸ்திகன்.

--கபீர்தாசர்

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

ரோர்களது கால்விலங்கு கழலச்செய்ததால் சான்றோர்க்குப் புகலானவன், பரமகதியானவன்.

தனது அன்பர்க்கு அன்பனே (9-10-5)

**705.** ஸத்க்ருதி: - வெண்ணெய் களவிலுண்டது, உரலில் கட்டுண்டது போன்ற லீலைகளைக் கேட்போரது பிறவியைப் போக்கி நல்லன செய்பவன்.

மலக்கு நாவுடையேற்கு மாறுளதோ
இம்மண்ணின் மிசையே? (6-4-9)

[மலக்கு(ம்) நா உடையேன், உடையேற்கு-அவனையும் மயக்கும் நா உடைய எனக்கு, மாறு-ஒப்பு, எதிர்.]

**706.** ஸத்தா - ஸாதுக்களின் வாழ்வுக்கு ஆதாரமாக இருப்பவன்.

விடுவேனோ என் விளக்கை, என்
ஆவியை? (1-7-5)

[விளக்கு-விளங்கச் செய்பவன்.]

**707.** ஸத்பூதி: - சான்றோர்க்கு எல்லாவகைச் செல்வமாக விளங்குவோன்.

சேலேய் கண்ணியரும், பெருஞ்செல்வமும்
நன்மக்களும், மேலாத் தாய்தந்தையரும்
அவரே (5-1-8)

**708.** ஸத்பராயண: - ஸத்துக்களையே தனக்கு ஆதாரமாகக் கொள்பவன். (பாண்டவர் தனக்கு ப்ராணன் என்றது குறிப்பு.)

[ஸத்பராயணம்-ஸத்துக்களுக்குப் பரமகதியானவன்.]

ஐவர்கட்காகி, வெஞ்சமத்து, அன்றுதேர்
தடவிய பெருமான் (3-6-10)

**709.** சூரஸேந: - பூமியின் பாரத்தை நீக்குவதற்தகாக, யாதவர், பாண்டவர் போன்ற சூரர்களைத் தனக்குத் துணையாகக் கொண்டவன்.

மண்மிசைப் பெரும் பாரம் நீங்கப், பாரதமா
பெரும்போர் பண்ணி (6-4-10)

**710.** யதுச்ரேஷ்ட: - யயாதியின் சாபத்தாலே தாழ்ந்த யது வம்சத்தை உயர்த்தியதால் யதுக்களில் சிறந்தவன்.

ஆயர்க்கு அதிபதி அற்புதன் தானே
(8-6-9)

**711.** ஸந்நிவாஸ: - மனிதனாய் அவதரித்துச் சான்றோர் இளைப்பாறுமிடமானவன். (ஸநகர் முதலான ஸாதுக்களுக்கு இளைப்பாறுமிடம்)

கலக்கமில்ல நல்தவமுனிவர் கரைகண்டோர்
துளக்கமில்ல வானவர் எல்லாம் தொழுவர்கள்
(8-3-10)

**712.** ஸுயாமுந: - யமுனையில் தான் செய்த க்ரீடை எல்லாம் பாவனங்களாய்ப் பரகதியைத் தருவனவாய் விளங்குவோன்.

பூதா வாஸோ வாஸுதேவ:
ஸர்வாஸுநிலயோऽநல: ।
தர்ப்பஹா தர்ப்பதோऽத்ருப்தோ
துர்த்தரோதா உதாபராஜித: ॥ 76 ॥

**713.** பூதாவாஸ: - கண்ணனாக அவதரித்த போதும், பரத்வ நிலையில்போல, பிராணிகள் யாவும் தன்னை எளிதில் அண்டும்படி இருப்பவன்.

உயிர்கள் எல்லா உலகுமுடையவனை
(3-2-11)

**714.** வாஸுதேவ: - வஸுதேவன் மகனாகப் பிறந்தும் வ்யூஹ வாஸுதேவனாக விளங்குவோன்.

**715.** ஸர்வாஸுநிலய: - ஆதரவும் எல்லாப் பிராணிகளுக்கும் உயிராக விளங்குவோன்.

ஓர் உயிரையே உலகங்கட்கெல்லாம்
(8-1-5)

**716.** அநல: - அன்பர்க்குத்தான் செய்தது போதும் என்று நினையாமல் மேன்மேலும் செய்வதில் விருப்பமுடையவன்.

கருத்தின்கண் பெரியன் (10-8-6)

### 27.3 வியக்கத்தக்க செயல்கள்

**717.** தர்ப்பஹா - குன்றைக் குடையாக ஒந்தது, கற்பக மரத்தைக் கொண்டுவந்து நடுவது போன்ற செயல்களால் இந்திரன் போன்ற தேவர்களது கொழுப்பை அடக்கியவன்.

(தொடரும்)



# ஆண்டாளின் அனுபவம்

திரு. பா. அ. முனுசாமி - திருப்பதி.

அன்பும், அழகும், அறமும், கல்வியும் பெற்ற ஓர் நல்ல ஆண் மகனுக்கு அக்குணங்களே சிறிதும் இல்லாத பெண் மனைவியாக அமைந்து விட்டால் அவன் எப்படி மனமொத்த இல்வாழ்க்கை நடத்தமுடியும் என்ற வினாவிற்கு விடையளிக்கிருள் ஆண்டாள்.

உங்கள் வீட்டுத் தோட்டத்திலுள்ள தடாகத்தில் நீலோத்பல மலர்கள் மலரும் நேரத்தில் கருநெய்தல் மலர்கள் குவிகின்றன என்று உங்கள் புழக்கடைத் தோட்டத்து பாசுரத்தின் முதல் இரண்டடிகளில் இயற்கையின் முரண்பாட்டை படம் பிடித்துக் காட்டுகிருள். சத்வம், தாமஸ் ஆகிய குணங்களின் ஆட்சியே இயற்கை எனப்படும். அந்த இயற்கையை எதிரியாக நினைக்காதவர்கள் உலகத்தையும், உலக மக்களையும் புரிந்து கொள்வார்கள்.

மனச் சஞ்சலத்திற்கு இடமளிக்காமல் மகிழ்ச்சியுடன் வாழ்வார்கள். பாண்டவர்களோடு முரண்பட்டு வாழ்ந்த கவுரவர்களுக்கு மத்தியில் பிதாமகன் பீஷ்மர் பற்றற்ற நிலையில் சாந்த சொரூபியாக வாழவில்லையா?

காமம், பேராசை குறுகிய மனப்பான்மை, போன்ற குணங்களே கூத்தாடும் வைராக்கியத்தையும், விவேகத்தையும் வளர்க்கும் ஆன்மீக சாதனங்களில் பயிற்சியளிக்க முயலவேண்டும். எந்நிலையிலும் சமத்துவ புத்தியை வகிக்கவேண்டிய யுத்தகளத்தில் கீதை போதிக்கப்பட்டது. அந்த யுத்தம் இல்லத்திலோ அலுவலகத்திலோ எங்கு நடந்தாலும் சரியே.

பக்த துகாராம், தெய்வத்திரு இராமானுஜம் போன்ற மகான்களுக்கு நல்ல குணங்கள் உள்ள மனைவியமையவில்லை.

ஓர் அழகான பெண்ணைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் ஆற்றல் ஓர் ஆண் மகனுக்கு இல்லை. ஓர் கவர்ச்சியான ஓர் இளைஞனைத் தேர்ந்தெடுக்கும் ஆற்றல் ஒரு பெண்ணுக்கு கிடையாது. எல்லாம் அவரவர் பூர்வ கர்ம வினைகளுக்கு ஏற்ப முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டவர்கள். இந்த மகத்தான உண்மையை எல்லோரும் மறந்து விடுவார்கள். தாங்கள் பார்த்துச் செய்வது தான் என்று நினைக்கிறார்கள். எல்லாமே தெய்வத்தின் விருப்பம் என்ற விருப்பு வெறுப்பற்ற நிலையில் அறிவு செயல்பட தாமரை மலரை ஒத்த கண்களுடைய கண்ணனைப்பாடு என்று ஆண்டாள் 'பங்கயக் கண்ணனைப்பாடு' என்கிருள். தாமரையில் தண்ணீர் விழுந்தாலும் ஒட்டாததைப்போல் இல்லறத்திலோ, வெளியிடங்களிலோ, ஏற்படும் பிரச்னைகளை, தீர மதிநலம் அருளப்பாடுங்கள் என்கிருர் ஆண்டாள்.

கண்ணன், செய்பவனும் நானே செய்யப்படுபவதும் நானே என்று கீதையில் கூறியதை நினைவில் கொண்டு மற்றவர் குற்றங்களையும் தம் குற்றம் என்று ஏற்றுப் பிழைத் திருத்தல் வைணவர் குணம். இக்கருத்து குறள் தாக்கத்தைப் பெற்றுள்ளன என்பதைக் காணலாம்.

'ஏதிலார் குற்றம் போல், தம் குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு'[குறள்]

என்னும் குறளும்,

தன் குற்றம் நீக்கி பிறர்குற்றம் காண்கிற்பின்
எம் குற்றம் ஆகும் இறைக்கு (குறள்).

என்னும் குறளும், குற்றங்கடிதலைக் குறித்து கூறுவதை நாம் காணலாம்.

ஆண்டாள் பதினைந்தாவது பாசுரத்தில் குறிப்பிடும் நானே தான் ஆயிடுக என்றபதம் வைணவ லட்சணத்தை எடுத்துக்காட்டுகிறது.

நாம் செய்யும் பாவங்களை நாமே உணரமுடியாது. பிறருக்குத்தான் அவை தெரியும். தெரிந்தவர் சொல்லும் போது ஏற்றுக்கொண்டு அவரை வணங்கவேண்டும். செய்யாத பாவங்களைச் சொல்லித் தூற்றி நாம் இப்பிறவியில் பாவங்கள் செய்வில்லை என்ருலும், சென்ற பிறவியில் செய்தது இப்போது குற்றம் கண்டு பிடித்தவர்களுக்கு எப்படித் தெரியும் என்ருல் அவராகப் பேசவில்லை. அவருக்குள் மறைந்து இருக்கும் இறைவன்தான் பேசுகிருன். இறைவன் அறியாதது ஏதாவது இருக்கமுடி

யுமா? எனவே குற்றங்களை ஏற்றுக் கொண்டு அடுத்த முயற்சி செய்ய வேண்டும். இந்த ஸ்வரூப ஞானமே ஸ்ரீவைஷ்ணவ லட்சணமாகும்.

இளங்கிளி போல் இனிமையான பேச்சுடையவளே என்ற பொருளில் எல்லே இளங்கிளியே என்ற பதம் ஆண்டாளின் நுட்பமான புலமையைக் காட்டும் கிளி ஒரு தடவை ஒரு வார்த்தை சொல்லிக் கொடுத்துவிட்டால் அதையே மாற்றாமல் பொருள் அறியாமலும் சலிப்பின்றி சொல்லிக் கொண்டே இருக்கும். அது போல் குரு அருள்பெற்றவன் அவர் உபயோகித்த மந்திரத்தைப் பொருள் அறியா நிலையிலும் கூட ஜபம் செய்து கொண்டே இருப்பான். அவன் முகத்தில் முதுமை படராமல் ஒளி வீசிக்கொண்டே இருப்பான். இளமை மாறாமல் அதாவது சதா காலத்திலும் தோற்றம் அளிப்பது ஆச்சரியம் அல்லவா? அத்தகைய மந்திரஜெப மூலம் தன்னுணர்வு பெற்றவர்களே பிறர் குற்றங்கள் கூறினாலும் அதனைப் புன்முறுவலுடன் ஏற்றுக்கொள்வர்.

"எல்லே இளங்கிளியே" என்று தன்னொத்த ஒரு தோழியை துயில் எழுப்பிய ஸ்ரீஆண்டாள் நமது இடது தோளில் ஒரு கிளியை வைத்துக் கொண்டு காட்சி தருகிறார்.

இலைகளால் உருவாக்கப்பட்ட இந்தக் கிளி தினமும் புதிதாக அலங்காரத்தின் பொழுது மாற்றி வைக்கப்படும். பழைய கிளியைப் பக்த பிரமுகர்கள் விரும்பி வந்து நிர்வாக அலுவலகத்தில் பெற்றுப் போவார்கள். ஆண்டாள் சூடிக்களைந்த கிளியை போற்றி பாதுகாக்கின்றார்கள். எப்படி சேற்றில் வாழ்ந்தும் சேறு ஒட்டாத மீனைப்போல், கண்கள் இருந்தும் மூடாத மீனைப்போல் சம்சாரிகளிடையே வாழ்ந்தாலும் அவர்களது இயல்பு ஒட்டாமல் வாழ்வார்கள். உலகியல் ஆசைகளில் மூழ்கும் காலத்திலும் அவைகள் அறிவை மூடாதபடி விழிப்புணர்வோடு வாழ்வார்கள். அவர்களுக்கு குரு அருள் உண்டாகும். இதனையே குலசேகராழ்வார் தமது பெருமாள் திருமொழியில்,



**"தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்**
**மீனாய் பிறக்கும் விதியுடையவனாவேனே"**

என்று குலசேகராழ்வார் மீன் ஆசைப்பட போன்ற இயல்பை, ஆண்டாள் சூடிய கிளியைப் பெற்றதன் மூலம் அடைவார்கள்.

கவிதார்க்கி சிம்மம் ஸ்வாமி நிகமாந்த மஹாதேசிகன் ஒரு சமயம் ஸ்ரீஆண்டாளை வழிபட ஸ்ரீவில்லிப்புத்தூர் எழுந்தருளியிருந்தார். அன்று ஸ்வாமி தேசிகன் மவுன விரதம். ஆண்டாளுடைய திருவீதிப் புறப்பாடு நடந்துக்கொண்டு இருந்தது. அவர் தங்கியிருந்த வீதியில் அன்று ஆண்டாள் எழுந்தருளும் முறை இல்லை.

அப்படியிருந்தும் திடீரென்று ஆண்டாள் அவ்வீதியில் எழுந்தருள, அவர் கோதா தேவியை சேவித்தார். ஆனந்தம் பொங்கி தம்மை மறந்தநிலையில் கோதா ஸ்துதி என்னும் 29 பாட்ல்களை வடமொழியில் பாடலானார்.

தென்னரங்கனுக்கு அணிந்த மாலையை அளித்து, அதனால் மதிப்படைய சோலைக்கிளியாக விளங்குவது ஆண்டாளுக்கு மட்டுமே கிடைத்த பெரும் பாக்கியமாகும். இதனால்தான் ஸ்ரீமணவாள மாமுனிகள் ஆண்டாள் திருவாடிப்பூரத்திற்கு எந்த நாளும் ஒப்பாகாது; ஏனென்றால் ஆண்டாளுக்கு இணை எவரும் இல்லை என்று போற்றினார்.



## சிரஞ்சீவிகள் (ஏழுபேர்)

1. அசுவத்தாமன்
2. பரசு ராமன்
3. மார்க்கண்டேயன்
4. அனுமன்
5. விபீடணன்
6. மகாபலி சக்கரவர்த்தி
7. வியாசர்

# கோதை அருளிய பாவை

திரு. வே. சோமசுந்தரம் - நங்கநல்லூர்.

திருமால் அறத்தை நிலைநாட்டவும், மறத்தை ஒழிக்கவும் இந்நிலவுலகின்கண் பல அவதாரங்கள் எடுத்துள்ளான். திருமகளோ, 'திருமாலே பரம்பொருள்; அவனிடத்து பக்தி கொண்டு ஒழுகலே உயிர்கள் உய்யும் வழி' என்பதை நிலைநாட்ட பூமியில் அவதரித்துள்ளாள். அவ்வவதாரங்களில் ஒன்றுதான் திருக்கோதையார் ஆகிய ஸ்ரீஆண்டாள் சரிதம் ஆகும். "திருமாலிடத்து ஆன்மாக்கள் எவ்விதம் பக்திகொண்டு ஒழுக வேண்டும் எவ்வாறெல்லாம் அவன் திருப்பெயர் பெருமைகளைச் சொல்வதன்மூலம் உயர்வடைந்து திருநாட்டுக்குச்சென்று சேர வேண்டும்' என்பவற்றைத் தம் வாழ்வாலும், தாம் செய்தருளிய திருப்பாவையாலும் உணர்த்தி அருளினார் திருக்கோதையார்.

முன்பொரு காலத்தில் பூமி பிராட்டியை இரணியாக்கன் என்ற அரக்கன் கடலுக்கடியில் கொண்டு சென்று வைத்துவிட்டான். அதனையறிந்த திருமால் அவனோடு போரிட்டுக் கொன்று, பூமி பிராட்டியை வெளிக்கொணர்ந்து பழைய நிலையில் இயங்கச் செய்தான். அப்போது அவன் பிராட்டியை நோக்கி, 'வரமேதும் வேண்டுமானால் கேட்கலாம்' என்று கருணை பொங்கச் சொன்னான். பொறுமைக்கு இலக்கணமான பிராட்டியோ தமக்கென எதுவும் கேட்காமல் அப்பாவிகளான தரணிவாழ் மக்கள் உய்யும் வழிவகைகளைப பற்றிக் கூறுமாறு வேண்டிக்கொண்டாள். பெருமாறும் பல வழிகளைச் சொல்லி, அவற்றில் தலை சிறந்தது 'நாம சங்கீர்த்தனமே, அதுவே தாம் உகப்பது; தரணி மக்களைத் தம்பக்கல் சேர்ப்பது' என்று மொழிந்தருளினான். உடனே, பூமி பிராட்டியானவள் வராகப் பெருமானின் அனுமதியோடு திருமாலின் திருநாமச் சிறப்புகளை உலகமெங்கும் பரவுமாறுச் செய்ய திருவவதாரம் செய்தருளத் திருவுளம் கொண்டாள்.

அதற்கியைய கலியுகத்தில் தொண்ணூற்றெட்டாவதான நள வருடத்தில் ஆடிமாதம் சுக்ல பக்ஷம், ஆரும்தேதி, செவ்வாய்க்கிழமை கூடிய பூர நன்னாளில் ஸ்ரீவில்லிப்புத்தூரில் பெரியாழ்வாரின் துளசித் தோட்ட மண்ணில் ஒரு பெண் மகவாகத் தோன்றினாள். வழக்கம்போல் தோட்டத்தைச் சீர் செய்யும் பணிக்காக அங்கு வந்த பெரியாழ்வார் அழகிய பெண்மகவைக் கண்டு அகமகிழ்ந்து, தம் இரு கைகளிலும் அக்குழந்தையை எடுத்து அணைத்துக்கொண்டு, உச்சி மோந்தார். எங்கும் காணக்கிடைக்காத அப்பெரும் புதையலை - கண்டாரை மயக்கும் கட்டழகு பெட்டகத்தை - அகிலத்தை வாழ வைக்கும் அருமருந்தை - 'அம்மா, அம்மா' என்று அரற்றுவார் அல்லலைப் போக்கும் திருமகளைத் தம் துணைவியாரிடம் கொண்டு போய்க் கொடுத்தார். இருவருமாக அம்மகளுக்கு "கோதை" என்று திருநாமமிட்டனர். "பின்னை கொல், நிலமாமகள்கொல், திருமகள்கொல் பிறந்திட்டாள்" என்றவாறு சீராட்டிப் பாராட்டி வளர்த்தனர்.

கோதை என்ற சொல்லுக்கு மாலை என்பது பொருள். பின்னாளில் அவர் எம்பெருமாளுக்குப் பல மாலைகளைச் சூடிக் கொடுக்கப் போவதாலும், திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்ற பாமாலைகளைப் புனைந்தருளப் போவதாலும், திருமகளான அவர் மலரினும் மெல்லிய மனம் படைத்தவராய் அடியார் படும் துயரம் கண்டு இரங்கியருளும் உளம் கொண்டவர் ஆதலாலும், திருமாலின் மலர்மார்பில் மலர்களுக்கெல்லாம் மண் சேர்க்கும் மலர் மங்கையாய் நித்திய வாசம் செய்பவர் ஆதலாலும் கோதை என்ற பெயர் அவருக்கு மிகவும் பொருத்தமானதே ஆகும்.

கோதை நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகையில் கோகுலக் கண்ணன் லீலைகளைப் பெரியாழ்வார் மூலம் கேட்டறிந்தார். கண்ணனே தம் கருத்திற்கிசைந்த கடவுள் என்று தேர்ந்தார். அவன் மீது அளவிலாச் காதல் கொண்டவரானார். பரவமடைந்தபிறகு, 'கண்ணனுக்கு ஏற்ற மனையாட்டியாய் தம்மால் வரலாகுமோ?'

என்ற ஏக்கம் மிகக் கொண்ட வரானார். தினமும் தம்மை ஆடையணிகலன்களால் அலங் கரித்துக் கொள்வார். பெரி யாழ்வார் தினமும் வடபெருங் கோயிலுடையானுக்காக கட்டி வைத்திருக்கும் திருமாலையைச் சூடிக் கொள்வார். கண் ணுடியின் முன்னின்று தம் அழகுருவைக் கண்டு, 'கமலக் கண்ணனுக்குத் தாம் ஏற் றவளே' என மனம்தேறுவார். பின்னர் மாலையைக் கழற்றி இருந்த இடத்தில் வைத்து விடு வார். பெரியாழ்வார் கோதை மாலையைச் சூடிக் களைந்த விவரம் அறியாதவராகை யால் தன்னைக் கோயிலுக் குக் கொண்டு சென்று, பெரு மாளுக்கு அணிவித்தும மகிழ லானார். இவ்வாறு பல நாட் கள் நிகழ்ந்து வருகையில் ஒரு நாள் கோதை பெருமாளுக்கான மாலையும் கழுத்துமாக இருக் கையில் பெரியாழ்வார் பார்த் துவிட்டார். 'பரமனுக்கான மாலையும் கழுத்துமாக இருக் கையில் பெரியாழ்வார் பார்த் துவிட்டார். 'பரமனுக்கான மாலையை தம்மகள் அணிந்தது பெரும் பாவமல்லவா!' என்று துடித்துப்போனார். "மகளே, இனி ஒருபோதும் மாலவனுக் கான மாலையை நீ சூட லாகாது" என்று கோதையைக் கடிந்துக் கொண்டார். அன் றைய தினம் வடபெருங் கோயிலுடையானுக்கு மாலை அணிவிக்கப்படவில்லை. அன்றி ரவு துயிலும்போது பெருமாள் பெரியாழ்வார் கனவில் தோன் றினார். "பட்டரே, கோதை சூடிக் களைந்த மாலையே எமக்குப் பேருகப்பாகும்; இனி மேல் தினமும் அவள் அணிந்து அழகு பார்த்துக் கழற்றித் தரும் மாலையையே எமக்கு நீர் சூட் டக் கடவீர்" என்று திருவாய் மலர்ந்தருளினான். பெரியாழ் வாரால் அக்கட்டளையை மீற முடியுமா? அன்றிலிருந்து கோதை, "சூடிக்கொடுத்த சுடர்க் கொடி" ஆனார்.

கோதை காலஞ் செல்ல செல்ல, 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்று சொல்லுமளவிற்கு மனத் தெளிவடைந்திருந்தார். 'தாம் தோன்றியது திருமாலுக்கு மாலையிடவே' என நெஞ்சுறுதி கொண்டார். பெரியாழ்வார் மூலம் நூற்றெட்டுத் திருத்தல எம்பெருமான்களின் பெருமைக ளைக் கேட்டறிந்து தமக்கு மண ளனாகத் தக்கவன் அணியரங் கத்தம்மானே! என்ற முடிவுக்கு வந்தார். பெருமல் பெற்ற பெரி யாழ்வாரோ மகளின் நிலை கண்டு மருகினார். 'பரந்தாமன் தம் புதல்விக்கு மாலையிட வரு வானோ?' என்று ஏங்கினார்.

ஆனால், அவருடைய பெண் வெறும் ஏக்கத்தோடு இருந் தாரிலர். முகில்வண்ணன் பேர்பாடி நோன்புகள் இருந் தார். அவருக்கு ஸ்ரீவில்லி புத்தூர் திருவாய்ப்பாடியாகத் தோன்றியது. அங்குறையும் பெண்டிரும், தாமும் ஆயர் பெண்களாக பாவித்தார். வட பெருங்கோயில் நந்தகோபர் திரு மனையாக காட்சி நல்கியது. பெரியபெருமாள் கண்ணபிரா னாக கோதையின் கருத்தில் தோன்றினார்.

அந்நிலையில் அவர் அரு ளிச் செய்ததே திருப்பாவையா கும். அதன்கண், கண்ணனி டத்தே பக்தி பூண்ட கோகு லத்து ஆயமகளிர், மார்கழி மாதத்து விடியற்காலையில் தம் பருவத்தோடத்த பிற இளவயது ஆயர் பெண்டிரையும் துயில் நீக்கி உடன் அழைத்துக் கொண்டு போய், நந்தகோபர் அரண்மனை அடைந்து, அங் குள்ளாரின் தூக்கத்தையும் களைந்து, உறிதியாக கண்ண னையும் எழுப்பி அவனோடு கூடியிருந்து அருள்பெற்று உய்ந்ததாகக் கூறும் முப்பது பாடல்கள் உள்ளன.

கண்ணன் மீதான கோதை யின் காதல் நாளாக நாளாக பெருகிக் கொண்டே போயிற்று. அப்பெருக்கமே, "நாச்சியார் திரு மொழி" என்னும் காதல் கனாத் திறம் நிரம்பிய பக்திப் பனு வலாக வெளிப் போந்தது. எம் பெருமாளும் தக்க நேரத்தில் கோதையின் திருக்கரம் பற்றத் திருவுளம் கொண்டான். ஒரு நாளிரவில் பெரியாழ்வாரின் கனவில் தோன்றி கோதைக்கு மணக்கோலம் செய்வித்து திரு வரங்கத்திற்கு அழைத்து வரு மாறு பணித்தான். அத்திரும கள் கேள்வனே பாண்டி நாட்ட ரசன் வல்லபதேவன், திருவரங் கக்கோயில் பணியாளர்கள் கன விலும் தோன்றி, கோதைக்கும் பெரியாழ்வாருக்கும் சிறப்பான வரவேற்பளிக்குமாறு கட்டளை யிட்டருளினான். மங்கல நன் னாளில் பாரோர் கண்டு களிக் கவும், விண்ணோர் போற்றி புக ழவும் பெரியாழ்வோரோடு திரு வரங்கம் வந்த கோதை பெரி யபெருமாள் கோயில் புக்கு அழ கிய மணவாளனோடு இரண்ட றக் கலந்தார்.

கோதை முதன்முதலில் பெரி யாழ்வாரைத் தம் அன்பால் ஆண்டார். பிறகு ஆண்டவ னையே பக்கியால் ஆண்டார். எந்நாளும் எம்பெருமானிடத்து நம்மை ஆட்படுத்தி அருளும் தன்மையால் நமக்கும் ஆண்டா ளாகி "ஆண்டாள்" என்ற திருப்

பெயரும் தாங்கி திருக்கோலம் நல்குகின்றார்.

இனி, திருப்பாவை நூலின் உயர்வு பற்றி சிறிது காண்போம்.

திருப்பாவை தித்திக்கும் செந்தமிழ்ச் சொல்லமுது. எத்திக்கும் திருமால் புகழ் பரப்பும் பான்மையது. தொட்ட தொட்ட இடமெல்லாம் மாமாயன், மாதவன், வைகுந்தன் என்று திருமாலின் நாமம் பலவும் நவில்வது.

அதற்கு எழுந்துள்ள உரைகள் ஏராளம். பெரிய பெரிய வியாக்கியானக் கர்த்தாக்கள் அதனுள் ஆழ்ந்து அரியபெரிய நான்மறைக் கருத்து முத்துக்களை வெளிக்கொணர்ந்துள்ளனர். சாதாரண பாமர மக்களோ 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்பதற்கிணங்க அதனைப் பாடிப் பரவி, 'திருப்பாவையே நம்மைத் திருமாலிடம் சேர்ப்பிக்கும்' என்ற உறுதி கொண்டவராய் மிளிர்கின்றனர்.

இங்கே, இராமாநுசர் திருப்பாவையைப் பற்றிக் கூறியுள்ள கருத்து அதன் உயர்வைக் காட்டும். "திருவாய்மொழிக்கு உரை வகுப்பதிலும் திருப்பாவைக்கு உரை கூறுவது மிகக் கடினம்" என்பது அவர்தம் மதிப்பீடு.

திருப்பாவை பாவை இலக்கிய வகையைச் சேர்ந்ததாகும். பாடல்தோறும் ஈற்றில் 'எம் பாவாய்' என்ற தொடர் வருகிறது. அத்தொடரை 'எங்கள் பாவை (சிலை) போன்ற பெண்ணே!' என்ற விளியாகக் கொள்ளலாம். ஆராய்ச்சியாளரில் ஒருசிலர், 'எம்பாவாய்' என்பது தேவியைக் குறிப்பதாகக் கொண்டு, 'ஆய்ப்பாடிப் பெண்கள் யமுனை ஆற்றில் நீராடி அதன் கரையில் ஈர நுண் மணலால் தேவியின் உருவத்தைச் செய்தமைத்து, மார்கழி மாதம் முழுவதும் வழிபட்டு வந்து, ஆவினம் பெருகவும், பாவங்கள் நீங்கவும், கண்ணனைக் கணவனாக அடையவும் வேண்டி வரம் பெற்றனர்' என்றுரைப்பர். மற்றுஞ்சிலரோ, அத்தொடருக்கு, 'நோன்பு' என்ற பொருள் கொண்டு, மார்கழி மாத நோன்பு ஆய மகளிரால் கண்ணன் தெய்வமாக வணங்கி வழிப்படப்பட்டு, அவர்கள் அவன் அருள் பெற்று ஆனந்தத்தித்தைக் குறிக்கும் என்பர். பின்னுள்ள கருத்தே சரியானதாகத் தோன்றுகிறது. ஏனென்றால், ஆய்ப்பாடிப் பெண்களின் கண்ணினும் கருத்தினும் 'கண்ணன் எனும் கருந்தெய்வமே' எப்போதும் நிறைந்திருந்தபடியாலும், அவர்கள் மறந்தும் புறந்தொழாத பெண்மணிகளாகத் திகழ்ந்தமையாலும் எனலாம்.

திருப்பாவை ஆற்றுப்படை இலக்கிய வகையைச் சேர்ந்ததாகவும் சொல்லலாம். திருமால் பக்தியில் ஆழங்கால்பட்ட பக்தர்கள், அவன் உணர்வில் தலைப்படும் பிற அன்பர்களையும் தம்மோடு சேர்த்துக் கொண்டு சென்று எம்பெருமான் அருளில் கலப்பதை விவரிக்கிறது நூல்.

கோதை, திருப்பாவை பாடியருளும்போது மனோநிலையால் இடை நடையும், இடைமுடியும், இடைப்பேச்சும், முடை நாற்றமும் கொண்டவளாய் விளங்கினாள். ஆதலால், அவள் பாடல்கள் நம்மை ஆய்ப்பாடிக்கே கொண்டு சென்றுவிடுகின்றன. நாமும் இடையர்களோடு இடையர்களாகி கண்ணனின் அருளுக்குப் பாத்திரர்களாகி விடுகிறோம்.

திருப்பாவைக்கு இன்னொரு சிறப்பும் உண்டு. மற்ற ஆழ்வார்களெல்லாம் ஆண் மக்கள். அவர்கள் என்னதான் 'நாயக - நாயகி' பாவத்தில் நாரணன் மீது காதல் பனுவல்கள் பாடினாலும் பெண்குலத்திலகமான திருமகளே கோதையாக வந்து தம் மணாளனான மாயவன் மீது காதல் மிக்குவர பாடியுள்ள திருப்பாவைக்கு ஈடாக பாடிவிட முடியுமா? முடியவில்லை என்பதே உண்மை.

திருப்பாவையின் முதல் பாட்டிலே 'நாராயணனே முழுமுதற் பொருள்' என வலியுறுத்திக் கூறும் கோதை கடைசியான முப்பதாவது பாட்டிலே 'திருப்பாவையைப் பாடுவார் திருமால் அருள்பெற்று இன்புறுவர்' என்று சொல்லி முடிக்கிறார். இடையிலே, ஆய்மகளிரான ஆன்மாக்கள் இறைவனை நோக்கிச் செல்லும் தம் ஆன்ம விடுதலைப் பயணத்தில் நேரும் அனுபவங்களைச் சொல்வதாக நூலைப் புனைந்துள்ளார். அதனால், பகவதனுபவம் வேண்டுவோர் பாகவதர்களோடு கூடிக்கலந்து செல்வதே சிறப்பு' என்ற உண்மை வெளிப்படக்காணலாம்.

முதல் ஐந்து பாடல்களும் பாவை நோன்பின் சிறப்பை எடுத்துக் கூறுகின்றன. மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளில் நீராடப்போனால் நாராயணன் நமக்கு அருளாகிய பறை தருவான். பாவை நோன்பின்போது நெய், பால், நீக்கி மையாலும் மலராலும் அழகு செய்துகொள்வதை விலக்கி, தீய காரியங்களை

ஒதுக்கிவிட வேண்டும். பாற்க டலுள் பையத்துயின்ற பரமன டியே பாடித்துதிக்க வேண்டும்; ஐயமும், பிச்சையும் ஆந்தனை யும் செய்ய வேண்டும். அவ் வாறு செய்வதால் தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்யும்; வள்ளல் பெரும் பசுக் கள் குடம் குடமாய் பால் தரும்; நீங்காத செல்வம் நிறைந்து விடும். தாமோதரனைத் தூம லர்த் தூவித் தொழுதால் நாம் செய்த செய்யப்போகும் பாவங் கள் அனைத்தும் இல்லையா கும்.

ஆறும் பாடல் முதல் பதி னைந்தாம் பாடல் முடிய தோழிமாரைத் துயிலுணர்த் தும் பாடல்கள் தூங்கு கின்ற பெண்களில்தான் எத் தனை வகை? பொழுது புலரும் காலத்து எழும் பல்வேறு ஒலி களைக் கேட்டும் எழவில்லை சிலர். ஊமையோ, அன் றிச் செவிடோ, அனந்தலோ, ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?' என்று வினா எழுப்புமளவிற்கு உறங்கிக் கொண்டிருக்கிறாள். கடைசியாக எழுப்பப்படுகின்ற பெண் மிக வும் சாமர்த்தியசாலி. தூக்கம் கலைந்தும்கூட அவள் படுக்கை யைவிட்டு எளிதில் எழுந்திருக்க வில்லை. போதருகின்றேன், எல் லாரும் போந்தாரோ?' என்று வாசலில் நிற்பவர்களிடம் பேச்சு கொடுத்துக் கொண்டே படுத் தவாறிருக்கிறாள். இறுதியில் ஒருவழியாக அவளும் எழுந்து வந்து திருக்கூட்டத்தில் சேர்கி றாள்.

தோழியரைத் துயிலெழுப்பும் பாடல்கள் ஆச்சாரியர்களைக் குறித்தனவென்றும், பக்தர்க ளின் பல்வேறு நிலைகளைக் காட்டுவனவென்றும், ஆழ்ந்த மறை பொருள்கள் பொதிந் தவை என்றும் பெரியோர் உரை விளக்கங்களில் கூறியுள்ளனர்.

கூட்டமாகச் சேர்ந்த கோபி யர்கள் நந்தகோபர் திருமாளி கையைச் சென்றடைகின்றனர். அங்கு முறையே கோயில், வாயில் காப்பவனையும், நந் தகோபரையும், யசோதையை யும், கண்ணனையும், பலதேவ னையும் அழைத்து துயிலெழ வேண்டுகின்றனர். உடனே கண்ணன் எழுந்திருந்து வந்து விடவில்லை. பெண்களுக்கு சற் றுத் தாமதமாகவேனும் அதற் கான காரணம் புரிந்தது. பிராட்டியின் கருணையின்றி பெருமாளின் அருள் கிட்டுமோ? தவறுணர்ந்த அவர்கள், நப் பின்னை நங்காய்! திருவே துயிலெழாய்' எனப்பாடி வேண் டுகின்றனர். அவள் அனு மதி பெற்றபின், கண்ணனைப் போற்றிப் புகழ்ந்து, அவன் துயில் நீங்கி வந்து தங் களுக்கு அருளவேண்டுமென்று கோருகின்றனர். அவர்கள் கோரிக்கை நிறைவேறுகிறது. பூவைப்பூ வண்ணனாகிய கண் ணன், சீரிய சிங்கம் துயில் நீங்கி மூரி நிமிர்ந்து முழங் கிப் போதருமாப்போலே வருகி றான். சிங்காதனத்தில் அமர்ந் துக்கொண்டு அவர்களின் குறை யைக் கேட்டருள்கிறான்.

உடனே கோபியரின் வாயி னின்றும் போற்றித் திருப்பாடல் பிறக்கிறது.

"அன்றிவ் வுலகம் அளந்தாய்!
அடிபோற்றி!
சென்றங்குத் தென்னிலங்கை
செற்றாய்! திறல்போற்றி!
பொன்றச் சகடம் உதைத்தாய்!
புகழ் போற்றி!
கன்று குணிலா எறிந்தாய்!
கழல் போற்றி!
குன்று குடையா எடுத்தாய்!
குணம் போற்றி!
வென்று பகைகெடுக்கும்
நின் கையில் வேல்போற்றி!
என்றென்றுன் சேவகமே ஏத்திப்
பறைகொள்வான்
இன்றுயாம் வந்தோம்
இரங்கேலோ ரெம்பாவாய்!"

கண்ணனின் அருல் வயப் பட்ட கோபியர் அவனோடு கூடியிருந்து குளிரும் பெருமி தத்தால்,

"எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்
உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கேநாம்
ஆட்செய்வோம்"

என்று போற்றி உரைக்கின்ற னர்.

திருப்பாவையின் உள்ளுறைப் பொருள் யாதென்றால் "கண் ணன் புகழ்மொழி" என்று சுருக் கமாகச் சொல்லி விடலாம். கோதை, திருமகளாயிருந்து திரு மாலின் வடிவழகைக் கண்ணு ரக் கண்டு களிமிகக் கூர்ந்தவர். ஆதலால் அவருடைய திருப் பாவையைத் தொட்ட தொட்ட இடந்தொறும் சொக்க வைக் கும் சுந்தரபெருமாளின் வடிவ ழகு வெளிப்பட்டு அருள்புரியக் காணலாம்.

முதல் பாடலிலேயே, "கார் மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்" என்கிறார். பெருமாள், பயன் கருதாமல் பெய்யும் மழைபோன்று அடி யார்க்கெல்லாம் வாரிப்பெருக்கி வளம் கொழிக்கச் செய்யும் பேரருள் உள்ளத்தவன். ஆத லால், அவன் கார்நிற மேனி யன், செந்தாமரை போன்ற கருணை ததும்பும் குளிர்ந்த கண்களை உடையவன். பகை வர்க்குச் சுட்டெரிக்கும் சூரிய னைப் போன்றும், பக்தர்களுக்

குத் தண்ணென்றிருக்கும் சந்திரனைப் போன்றும் காட்சி தரும் திருமுகக் கமலம் கொண்டவன், பார்வையாலேயே பகைவரின் தீமையை அழித்து, பக்தரின் இன்பத்தைப் பெருகச் செய்பவன் என்பது பொருள்.

பிறிதோரிடத்தில் ஆயமகளிர் கண்ணனிடம் துயில் நீங்கித் தம்மைப் பார்த்தருளுமாறு வேண்டுகையில்;

"கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப்
பூப்போலச்
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல்
விழியாவோ?"

என்கின்றனர். கண்ணனின் திருக்கண்கள் பாதி மலர்ந்துள்ள செந்தாமரை மலர்போல இருக்கின்றனவாம். ஆண்டவன் அடியார்செய்யும் குற்றங்களைக் கண்டுக் கொள்ள மாட்டான். எனவே, அவனடியார் ஏதேனும் தவறு செய்வதைப் பார்க்க நேரிடும் போது அவன் கண்கள் மூடிக்கொள்ள பார்க்கின்றன. அதே கண்கள் அடியவர்களுக்கு அருள் புரிவதற்காகவென்றால் வேகவேகமாகத் திறந்துக்கொள்கின்றன. இவ்வாறான மாறுபட்ட செயலால் அவன் கண்கள் பாதி மலர்ந்துள்ள செந்தாமரையைப் போன்று தோற்றம் அளிக்கின்றன.

இன்னும் எவ்வளவோ அரிய நுட்பங்களை திருப்பாவையி னின்றும் நாம் வெளிப்படுத்தி அனுபவிக்கமுடியும். ஆனால் யாராலும் திருப்பாவையைச் சுவைப்பதில் இராமாநுசருக்கு ஈடாக முடியாது. அதனாலேயே அவர் 'திருப்பாவை ஜீயர்' என்று வைணவப் பெருமக்களால் பெரிதும் போற்றப்படுகிறார். அவர் தினமும் திருப்பாவை பாடியவாறு ஊர் வலம் வந்து பிச்சை ஏற்று உண்பது வழக்கம். அவ்வாறே ஒருநாள் பெரியநம்பிகள் வீட்டின்முன் வரும்போது திருப்பாவை 18ஆம் பாடலைப் பாடியவாறு வந்தார். அப்பாடலை '......சீரார் வளை ஒலிப்ப வந்து திறவாய்' என்று பாடிமுடிக்கவும் பெரியநம்பிகளின் மகள் அத்துழாய் தாம் அணிந்திருந்த கைவளையல்கள் ஒலியெழுப்புமாறு வந்து கதவைத் திறக்கவும் சரியாய் இருந்தது. அவளைக் கண்ட இராமாநுசர் அவளை ஆண்டாளாகிய கோதையாகவே கண்டு தரையில் வீழ்ந்து வணங்கினார். அத்துழாய் மனம் பதறியவளாய்த் தம் தந்தையாரிடம் திரும்பிச் சென்று நடந்ததைக் கூற, அதைக்கேட்ட பெரியநம்பிகள், "உந்துமதக்களிற்றன் பாசுரத்தைப் பாடி வந்தனரோ இராமாநுசர்?" என்று வினவினார். ஒரு பரம பாகவதரின் உள்ளத்தை இன்னொரு பரம பாகவதர் புரிந்துகொண்ட சம்பவமாகவும் இதனைக் கொள்ளலாம்.

இராமாநுசர் வைணவ உலகின் விடிவெள்ளி. பக்தர்க்கு வழிகாட்டும் நூல் திருப்பாவை. அதனைப் பாடிப் பரவுவார் அரவணையான் அடியிணையில் சென்றணைவது உறுதி. எனவே, பக்தகோடிகள் அனைவரும் தாம் வாழும் திருப்பதிகளையே திருவாய்ப்பாடியாக பாவித்து, திருப்பாவையை நாள்தோறும் பாடி வந்து, மார்கழி நோன்பைத் தவறாது கடைப்பிடித்து உய்வடைவார்களாக.

பாதகங்கள் தீர்க்கும் பரம
னடிகாட்டும்
வேத மனைத்துக்கும் வித்தாகும்-
கோதைதமிழ்
ஐயைந்து மைந்தும் அறியாத
மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு.



## திருமால் - ஓர் அறிமுகம்

1. திருமால் - காத்தற்கடவுள்
2. நாயகி - திருமகள்
3. திருமகன்கள் - பிரமன், காமன், சாமன்
4. திருமகள்கள் - அமுதவல்லி, சுந்தரவல்லி
5. மருமகள்கள் - கலைமகள், இரதி
6. கோலம் - கிடந்த, நின்ற, இருந்த கோலங்கள்
7. வடிவு - உறுப்புகள் தாமரையை ஒக்கும்
8. நிறம் - கருமை
9. திருவுந்தி - நான்முகனை அருளிய சிறப்புடையது
10. மார்பு - திருமகள் உறைவது
11. மாலை - துளசி
12. கருவிகள் - சங்கு, சக்கரம், கதை
13. ஊர்தி - கருடன்
14. கொடி - கருடன் எழுதிய கொடி
15. விழா - ஓணவிழா
16. ஆடல் - அல்லியத்தொகுதி, மல்லன் ஆடல், குடக்கூத்து
17. அவதாரம் - பத்து+பதினைந்து = இருபத்தைந்து
18. அருளிப்பாடு - பாற்கடல் கடைந்தது

சி. சிவப்பிரியா - மயிலாடுதுறை.

# பகவத் கீதை

## பதிமூன்றும் அத்தியாயம்

உமைப்ரியன்

## க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்

### அர்ச்சுனன் கூறியது :

ப்ரக்ருதிம் புருஷம் சைவ க்ஷேத்ரம்
க்ஷேத்ரக்ஞமேவ ச ।
ஏதத் வேதிதுமிச்சாமி ஞானம்
ஞேயம் ச கேசவ ॥

"கேசவா! இயற்கை, மற்றும் புருஷனை, க்ஷேத்ரம் (புனிதமான இடம்) மற்றும் க்ஷேத்ரக்ஞனை (புனிதமான அவ் இடத்தை அறிபவனை) ஞானம் (அறிவு) மற்றும் அறிய வேண்டியதை ஆகியனவற்றைப் பற்றி நான் அறிந்து கொள்ள ஆசைப்படுகின்றேன்."

[இந்த கீதைச் செய்யுள் பொதுவாக பல பதிப்புகளில் இடம்பெறவில்லை.]

### பகவான் பதிலுரைத்தது :

இதம் சரீரம் கௌந்தேய
க்ஷேத்ரமித்ய பிதீயதே ।
ஏதத்யோ வேத்தி தம் ப்ராஹு:
க்ஷேத்ரக்ஞ இதி தத்வித: ॥ (1)

"கௌந்தேய! (குந்தியின் மகனே) இந்த உடம்பே க்ஷேத்ரம் என்று அழைக்கப்படுகிறது. யார் இதனை நன்றாக அறிகிறானோ அவனையே க்ஷேத்ரக்ஞன் என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்."

[க்ஷேத்ரம் என்றால் புனித மிக்க இடம் என்று கூறப்படுகிறது. திருமலை, திருவரங்கம் போன்றன திவ்ய க்ஷேத்ரங்களாகும். அல்லது ஆற்றல் மிகு அம்மாயவன் இருக்குமிடம் புனிதத் தலங்களாகும். அது போன்றே ஆண்டவன் உறையும் நமது ஆத்மா உள்ள இடமாகிய நமது உடம்பே க்ஷேத்ரமாகும். இந்த பேருண்மையை அறிந்த மனிதனே க்ஷேத்ரக்ஞன் எனப்படுவான்.]




க்ஷேத்ரக்ஞம் சாபி மாம் வித்தி
ஸர்வக்ஷேத்ரேஷு பாரத ।
க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞயோர்ஞானம்
யத்தஞ் ஞானம் மதம் மம ॥ (2)

'பரதகுலத்தில் தோன்றியவனே (அர்ச்சுனா) க்ஷேத்ரங்களில் எல்லாவற்றிலும் நானே க்ஷேத்ரக்ஞன் என்பதை அறிவாயாக! க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞன் பற்றிய அறிவே-உணர்வே ஞானம் என்பது என் கருத்து"

[க்ஷேத்ரம் என்பது இப்போது இயற்கை என்று குறிக்கப்படுகிறது. க்ஷேத்ரக்ஞன் என்பவன் புருஷன் எனப்படுகிறான். அதாவது அந்த இயற்

கைய அனுபவிப்பவன் புருஷ னாகிறுன். உடல், அதனை அனுபவிப்பவன் ஆகியோரை நன்கு தெரிந்தவனே இறைவ னாவான். மனிதன் அல்லது ஓர் உயிர் அவன் அல்லது அதனுடைய உடலை மட்டுமே அறிவர். ஆனால் இறை வனே எல்லா உயிர்களையும் அவ் உயிர்கள் உறையும் உடல் களையும் அறிபவன். ஏனென் ருல், எல்லா உயிர்களிடத்தும் ஆத்மாவாக அவ் இறைவன் விளங்குகிறுன். ஆகையால் அவர் எல்லாம் அறிந்தவராக எல்லா செயல்களின் நிலைக்கள னாகத் திகழ்கின்ருர். ஆகவே இயற்கையினையும், அவ் இயற் கையை ஆளும் இறைவனை யும் அறிவதே ஞானமாகும். ஜீவாத்மா பரமாத்மா பற்றிய உண்மை அறிவே ஞானமாகும்.]

தத்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச
யத்விகாரி யதஸ்ச யத் ।
ஸ ச யோ யத்ப்ரபாவஸ்ச
தத்ஸமாஸேன மே ச்ருணு ॥ (3)

"அந்த க்ஷேத்ரம் என்பது என்ன, அதனுடைய தன்மைகள் யாவை, அதனுடைய பிரிவுகள் என்ன, அது எங்கிருந்து தோன் றியது, அந்த க்ஷேத்ரக்ஞன் என் பவன் யார்? அவனுடைய ஆற் றல்கள் யாவை ஆகியனபற்றிச் சுருக்கமாகக் கூறுகிறேன் கேட் பாயாக."

[இச்செய்யுளில் ஜீவாத்மா வின் இயற்கைக்கூறுபாடுகளை, அதில் உறையும் பரமாத்மாவின் பெருமைகளை ஒவ்வொரு மனி தனும் அறிய வேண்டியதன் அவசியத்தை இறைவன் இங்கு உணர்த்துகிருர்.]

ருஷிபிர் பஹுதா கீதம்
சந்தோபிர் விவிதை: ப்ருதக் ।
ப்ரஹ்ம ஸூத்ர பதைஸ்சைவ
ஹேதுமத்பிர் விநிஸ்சிதை: ॥ (4)

"(க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் பற் றிய) உண்மைகள் பலவகை களாக பலமுனிவர்களால பல வகை பண்களைக்கொண்ட பாடல்களில் அழகாகக்கூறப்பட் டுள்ளன. புனிதமான அறிவை வழங்கக்கூடியதும், பகுத்தறிவு டன் கூடியதுமான பிரம்மசூத் திர சாத்திரங்களிலும் இது நன்கு விளக்கப்பட்டுள்ளது."

[மனிதன் உய்வதற்காக அவ னுக்கு நல்வழிகாட்டுவதற்காக அன்று நம் ஆன்ருேர்கள் பல வகையாக முயற்சித்திருக்கிருர் கள். தங்களுடைய நல் லுபதேசங்களை பிரம்மசூத்திரம் போன்ற புனிதமான நூல்க ளின் மூலமாக தெரிவித்துள் ளார்கள். தங்கள் உபதேசங் களை ஏதோ சட்டங்களாக விதி முறைகளாக இயம்பிடவில்லை. அறிவுப்பூர்வமாக ஏன், விஞ் ஞான ரீதியாகவும் விளக்கி யுள்ளார்கள். இந்த உபதேசங் கள் பாமரனையும் சென்றடைய வேண்டும் என்ற காரணத்தால், அவற்றை சந்தமிகு பாடல்க ளின் மூலமும் தெரிவித்துள் ளார்கள். இசை எல்லா உயிர்க ளையும் கிளர்ச்சியூட்டி, உணர்ச் சிகளை கிளப்பி இன்பமூட் டக்கூடியது. ஆகவே பரம்பொ ருளின் மெய்ப்பொருள் விளக் கங்களை மனிதன் அறிவதற் கான ஆர்வத்தை, ஆசையை வளர்த்திட நம்முன்னோர் தங் கள் வாழ்நாளையே அர்ப்ப ணித்துள்ளனர்.]

மஹாபூதான் யஹங்காரோ
புத்திரவ்யக்த மேவ ச ।
இந்த்ரியாணி தசைகம் ச பஞ்ச
சேந்த்ரிய கோசரா: ॥ (5)

இச்சா த்வேஷ: ஸுகம் து:கம்
ஸங்காதஸ்சேதனா த்ருதி: ।
எதத் க்ஷேத்ரம் ஸமாஸேன
ஸவிகார முதாஹ்ருதம் ॥ (6)

"மகா பூதங்கள், அகங்கா ரம், புத்தி, மூலப்பிரகிருதி (மாயை), பத்து இந்திரியங்கள், மனம், ஐந்து இந்திரியார்த்தங் கள், விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம், உடலமைப்பு, உணர்வு, உறுதி போன்ற வேறுபாடுகள் உடையது 'க்ஷேத்ரம்" ஆகிய இந்த உடல் என்று இங்குச் சுருக்கமாக கூறப்பட்டுள்ளது."

[ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், மண் ஆகியன கண்ணுக் குத் தெரியாமல் எங்கும் பரந் துள்ளதால் ஐம்பூதங்கள் 'மஹா பூதங்கள்' என்று அழைக் கப்பெறுகின்றன.'எனது' என்ற அஹங்காரம், (மமதை), அறிவு, மாயை, கண், காது, மூக்கு, நாக்கு, மெய் என்ற தொடு புலன்கள், ஒலி, கால்கள், கைகள், குதம் மற்றும் பால் உறுப்புக்கள் ஆகிய செயல்ப டும் ஐந்து புலன்கள், புலன்க ளுக்கு உள்ளே இருக்கும் மனம், மனதாலும் பெறப்படும் விருப்பு - வெறுப்பு, இன்ப-துன்பம், ஆகிய உணர்ச்சி இடைவிளை வுகள், பலபாகங்கள் பொருத்தப் பெற்ற இயந்திரம் போன்றதான இந்த உடமைப்பு, உடல் செயல் படுவதற்காக தூண்டுகோலாக இருக்கும் மன உணர்வு, மற்றும் நம்பிக்கை ஆகியன கொண்டு விளங்கி, செயல்படுவது இந்த உடலாகும்.]

இனி வரும் ஏழு முதல் பதினோரு செய்யுட்களில் பக வான் ஞானம் பெறுவதற்குரிய குணங்களைப் பட்டியல் போட் டுக்காட்டியுள்ளார்.

அபிமானத்வம்தம் பித்வமஹிம்ஸா
க்ஷாந்திரார்ஜவம் ।
ஆசார்யோபாஸனம் சௌசம்
ஸ்தைர்யமாத்மவிநிக்ரஹ: ॥ (7)

"தற்புகழ்ச்சியினிமை, செருக் கின்மை, அகிம்சை, பொறுமை,

நேர்மை, குருசேவை, தூய்மை, கடும்முயற்சி, புலனடக்கம்....."

இந்த்ரியார்த்தேஷு வைராக்ய
மனஹங்கார ஏவ ச |
ஜன்ம மிருத்யு ஜரா வ்யாதி து:க
தோஷானுதர்சனம் || (8)

"புலனின்பங்களில் நாட்டமின்மை, அஹங்காரம் இல்லாது இருத்தல், பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய் போன்றவைபற்றிய உண்மைகளை அறிதல்......"

அஸக்திரன பிஷ்வங்க: புத்ர
தாரக்ருஹாதிஷு |
நித்யம் ச ஸமசித்தத்வமிஷ்டானி
ஷ்டோபபத்திஷு || (9)

"உலக விஷயங்களின்மீது பற்றற்று இருத்தல், பிள்ளை, மனைவி, வீடு ஆகியவற்றின் மீது பற்றற்று விளங்குதல், இன்ப துன்ப நிகழ்ச்சிகளில் சமமான மனநிலை பெற்றிருத்தல்..."

மயி சானன்யயோகேன
பக்திரவ்ய பிசாரிணீ |
விவிக்த தேச ஸேவித்வமரதிர்
ஜனஸம்ஸதி || (10)

"என்னிடம் சிறிதும் மாறாத, கலப்பற்ற, வேறு சிந்தனையற்ற பக்தி கொள்ளுதல், தனிமையை விரும்புதல், கூட்டத்தோடு சேராது விலகியிருத்தல்......."

அத்யாத்ம ஞானநித்யத்வம் தத்வ
ஞானார்த்த தர்சனம் |
ஏதஜ்ஞானமிதி ப்ரோக்தமக்ஞானம்
யததோ அன்யதா || (11)

"ஆன்மீக எண்ணங்களில் - உணர்வுகளில் தன்னை ஒப்படைத்தல், பரம்பொருளின் பேருண்மையை அறிதற்குரிய தத்துவ விளக்கங்களைப் படித்தல் ஆகியனயாவும் ஞானத்திற்குரியதாகும். இவையெல்லாவற்றிற்கும் புறம்பானது - எதிரானது யாவும் அஞ்ஞானமேயாகும்."

[மேற்கூறிய ஏழுமுதல் பதினொரு செய்யுட்களில் மனிதன் தன்னை எவ்வாறெல்லாம் திருத்திக்கொள்ள வேண்டும், எவற்றையெல்லாம் பின்பற்றக்கூடாது, எதனையெல்லாம் வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்தி, ஆரோக்யமான உடலும், உயர்ந்த அறிவும், தெளிந்த மனமும் ஒரு மனிதனை மகானாக உயர்த்திடும் என்று விளக்கியுள்ளார். இச்செய்யுட்களில் கூறப்பட்டுள்ள கருத்துக்களைச் சுருக்கிக் கூறுவோமேயானால் மனிதன் உலகாயுத ஆசையினை விடுதலும்; தான்; தனது என்ற மமதை மனப்பான்மையை மறத்தலும்; தக்க ஒரு ஆசானை வாழ்க்கையில் கைக்கொள்ளுதலும்; ஆன்மீக நாட்டத்தில் உறுதி, சொல்லில் செயலில் நேர்மை; எக்காலத்தும், பின்பற்ற வேண்டிய பொறுமை; பிறப்பு, வாழ்க்கை, இறப்பு ஆகியவற்றில் மனிதன் தெரிந்துகொள்ள வேண்டிய நிலையாமை எனும் உண்மை; வீண் பேச்சும், ஆடம்பரமான, ஆர்ப்பாட்டமான சூழ்நிலையும் ஏற்படுத்தும் கூட்டத்திலிருந்து விலகி இருத்தல்; தனித்து இருந்து ஆத்மாவை பற்றிய பரிசீலனை போன்ற உயர் கருத்துக்களை பின்பற்றுதலும் ஆகியவையே உண்மையான உயர் அறிவான ஞானத்தைத் தரும் வழிகாட்டிகளாகும். மற்றவையாவும் அறியாமை எனும் இருட்டில் தள்ளச்செய்யும் மனித வாழ்க்கையின் எதிரிகளாகும்.]

(தொடரும்)

நாம் ஒவ்வொரு நாள் காலையிலும் முதல் வேலையாக இன்றைய தினம் பின்வருமாறு நடப்பதாக உறுதிகொள்வோமாக.

உலகில் ஒருவருக்கும் அஞ்சேன்
கடவுள் ஒருவருக்கே அஞ்சுவேன்
யாரிடமும் துவேஷம் கொள்ளமாட்டேன்
எத்தகைய அநீதிக்கும் உட்படேன்
பொய்மையை உண்மையால் வெல்வேன்

பொய்மையை எதிர்ப்பதால் உண்டாகும் துயரங்கள் அனைத்தையும் சகிப்பேன். பேசாதவர்களிடம் சென்று பேசுங்கள். வராதவர்கள் வீட்டுக்குப் போங்கள். கோபித்தவர்களைச் சமாதானப்படுத்துங்கள். இவையெல்லாம் அவர்களுடைய நலனுக்காகவே செய்ய வேண்டும். உலகம் நமக்கு முதலாளி. நாம் அதனிடம் கடன் பட்டவர்கள். தோல்வி என்ற சொல்லுக்கு நமது அகராதியில் இடமே இருப்பதற்கில்லை. நாம் நல்லவர்களாய் இருந்தால் உலகமும் நல்லதாய் இருக்கும். வாழ்வின் ஒரு துறையில் தவறான முறையில் செயலாற்றும் மனிதன் இன்னொரு துறையில் நல்ல முறையில் செயலாற்றமுடியாது. வாழ்க்கை என்பது பிரிக்கமுடியாத ஒரு முழுமையானது.

—காந்தியடிகள்

தொகுத்தவர்: சு. பொன்னம்மாள் - புத்தூர்.

# சீர்மிகு திருவில்லிபுத்தூர்

திரு. ச. முத்துச்சாமி - புத்தூர்.

## முன்னுரை

மனித வாழ்வைத் தூய்மைப்படுத்தவும், இனிமைப்படுத்தவும் தோன்றிய இயக்கம் பக்தி இயக்கம். சைவம், வைணவம் இரண்டும் பக்தி இயக்கத்தின் இருகண்கள் வைணவத்தை இந்த உலகில் நிலைபெறச்செய்தவர்கள் ஆழ்வார்கள். அவர்கள் அருளிச்செய்த நாலாயிர திவ்விய பிரபந்தம் சிறந்த வைணவ நூல். பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான கோதை என்கின்ற ஆண்டாள் அருளிய திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும் பக்தி உலகில் ஒரு சீரிய இடத்தைப் பெறுகிறது. பெரியாழ்வாரும், ஆண்டாளும் அவதரித்த ஊர் திருவில்லிபுத்தூர். அதன் பெருமையை விளக்குவதே இக்கட்டுரை.

## பெயர்க்காரணம்

வில்லிப்புத்தூர்ப் பகுதி ஒரு காலத்தில் செண்பகக்காடாக இருந்தது. இப்பகுதியை மல்லி என்ற பெண்ணரசி ஒருத்தி ஆண்டு வந்தாள். இறைவனது சாபத்தால் இரண்டு முனிவர்கள் அவளுக்கு இரண்டு புதல்வர்களாக பிறந்தார்கள். இவர்களுள் மூத்தவன் பெயர் வில்லி. இளையவன் பெய்ர் கண்டன். ஒருநாள் இளையவன் கண்டன் வேட்டைக்குச் சென்றபோது புலியால் கொல்லப்பட்டான் சகோதரன் இறந்த துக்கம் தாளாமல் மனம் உடைந்து வாழ்ந்தான் வில்லி. ஓரிரவு பாற்கடல் பரந்தாமன் வில்லியின் கனவில் தோன்றி அன்பனே! நீ இந்தக் காட்டை அழித்து இதனை ஒரு நகரமாகச் செய்வாயாக. சோழ, பாண்டிய நாடுகளிலுள்ள அந்தணர்களை அங்கு குடியேற்றுக என்று சொல்லி மறைந்தான். அதன்படி காடுகொன்று நாடாக்கிக் குளந்தொட்ட நகரமே திருவில்லிப்புத்தூர். வில்லியால் நிறுவப்பட்ட ஊராதலால் வில்லிபுத்தூர் என்ற பெயர் ஏற்பட்டது. மல்லிநாட்டிலுள்ள வடவேச்வபுரம் என்ற பழைய நகரத்தை வில்லி புதுப்பித்ததால் அந்த நகரத்திற்கு வில்லிபுத்தூர் என்ற பெயர் வந்தது என்றும் சொல்லுவர். இந்த ஊர் புத்தூர் என்றும் புதுவை என்றும் வேறு பெயர்களாலும் வழங்குவதைப் பெரியாழ்வார், ஆண்டாள் திருமொழிகளால் நன்கு அறியலாம்.

"பொருப்பன்ன மாடம் பொலிந்து
தோன்றும் புதுவை"

"வேதம் வாய்த்தொழிலாளர்கள்
வாழ்வில்லிபுத்தூர்"

"பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த
புதுவை"

"போகத்தில் வழுவாத புதுவை"

என்ற ஆண்டாளின் நாச்சியார் திருமொழிகளின் வாயிலாக அறியலாம்.

## பெரியாழ்வார்

ஆழ்வார்களில் ஒருவரான பெரியாழ்வார் பிறந்த ஊர் திருவில்லிபுத்தூர். விஷ்ணுவே முழுமுதற்கடவுள் என்ற உண்மையைப் பாண்டியன் அவையில் நிலைநாட்டிப் பொற்கிழியறுத்துப்பட்டர்பிரான் என்ற பெயர் பெற்றவர் அவர் இதை,

"மின்னார் தடமதில் சூழ்வில்லிபுத்-
தூர்
என்றொரு கால்
சொன்னார் கழற்கமலம் சூடினோம்
முன்னாள்
கிழியறுத்தானென்றுரைத்தோம்
கீழ்மையினிற்சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து"

என்ற பாடலால் அறியலாம். பெற்றோர் அவருக்கு இட்ட பெயர் விஷ்ணு சித்தர். வேதம் ஓதுவதையும் பலமலர்கள் மலர்கின்ற அழகிய நந்தவனம் அமைப்பதையும் தன்தொழிலாகக் கொண்டவர். மலர்களைக் கொண்டு பூமாலைகள் கட்டி இறைவனுக்குச் சூடி மகிழ்வதோடு பாமாலையும் கட்டி வந்தார். கண்ணபிரான் மீது அளவற்ற அன்பு கொண்டவர். அவனுடைய திருமேனி அழகைப் பலருக்கும் காட்டித்தாமும் அனுபவிக்கின்றார். அவன்குழல் ஊதும் அழகினை

"சிறுவிரல்கள் தடவிப்பரிமாறச்
செங்கண்கோடச்செய்ய
வாய்கொப்பளிக்க
குறுவெயர்புருவம் கூடலிப்பக்
கோவிந்தன் குழல் கொடுதீனபோது
பறவையின் கணங்கள் கூடுதுறந்து
வந்து சூழ்ந்துபடுகாடுகிடப்ப
கறவையின்கணங்கள் கால்பரப்பிட்டுக்
கவிழ்ந்துஇறங்கிச்செவியாட்ட
இல்லாவே"

என்று பாடுகிறார்.

பெருமான் வைகுந்தம் திருப்பாற்கடல், துவரை, முதலான இடங்களைத் துறந்து தம் உள்ளத்தில் ஆர்வத்துடன்பள்ளி கொண்டுள்ளான் என்பதை,

"அரவத்த மணியினோடும்
அழகிய பாற்கடலோடும்
அரவிந்தப் பாவையும் தானும்
அகம் படிவந்து புகுந்து
பரவைத் திரை பலமோதப்
பள்ளிகொள்கின்ற பிரான்"

என்று போற்றிப்பாடுகின்றார். கண்ணனாகிய குழந்தையைத் தாய்ப்பால் உண்ண தாய்நிலை யிலிருந்து அழைக்கிறார் பெரியாழ்வார். இதோ பாடல்,

மின்அனைய நுண் இடையார்விரி
குழல்மேல் நுழைந்த வண்டு
இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்
இனிது அமர்ந்தாய் உன்னைக்கண்டார்
என்னநோன்பு நோற்றாள் கொலோ
இவனைப்பெற்றவயிறுடையோள்
என்னும் வார்த்தை எய்துவித்த
இருடிகேசா! முலைஉணாயே!

பெருமானைப் பல்லாண்டு பாடித்துதித்த பாடல்

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்
தாண்டு பலகோடி நூறாயிரம்
மல்லாண்டதிண்தோள் மணிவண்ணா
உன்சேவடி செவ்வித்திருக்காப்பு
அடியோமோடும் நின்னோடும்
பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு
வடிவாய்நின்வலமார்பினில்
வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார்சோதிவலத்துறையும்
சுடராழியும் பல்லாண்டு
படைப்போர் புக்குமுழங்கும்
அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே
—பெரியாழ்வார்

## ஆண்டாள்

தாயன்புடன் திகழும் விஷ்ணுசித்தருக்கு மக்கட்பேறுவாய்க்க வில்லை. எம்பெருமான் அருளால் நந்தவனத்தில் திருத்துழாய்ச்செடி அருகில் அழகிய பெண் குழந்தை கிடப்பதைக் கண்டார் அவர். குழந்தைக்குக் கோதை என்று திருநாமம் சூட்டி அன்புடன் வளர்த்தார். விஷ்ணுசித்தர் நாள்தோறும் பூமாலை தொடுத்து இறைவனுக்கு அளிப்பது வழக்கம். தந்தைக்கு தெரியாமல் அம்மாலையைத் தான் முதலில் சூடிவிட்டு அதைப் பூக்குடலில் வைத்து வந்தாள் கோதை. ஒரு நாள் தந்தை, தன்மகள் மாலையைச்சூடும்பொழுது பார்த்து விடுகிறார். இறைவனுக்கு வேறு மாலை தொடுத்துச் சாத்துகிறார். பெருமான் அவர் கனவில் தோன்றி "ஆழ்வீர் நும் கோதை சூடிக்கொடுத்த மாலைகளே நாம் உகந்த மாலைகள்" என்று கூறி மறைந்தார். கோதை சூடிக்கொடுத்த மாலைகளையே விரும்பி அணிந்தார் பெருமான். "சூடிக்கொடுத்த சுடர்கொடியானாள் ஆண்டாள்" மங்கைப் பருவம் எய்தினாள். எம்பெருமானையே காதலனாக விரிக்கின்றார். அரங்கநாதன் சிந்தனையில் ஊறி அவனை எண்ணி, எண்ணி மகிழ்வதிலேயே தன் காலத்தைக் கழித்தாள். மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழ்கில்லேன்" என்று திருவரங்கநாதனையே மணக்கவேட்கை கொண்டிருந்தாள். "மாலிருஞ்சோலை எம்மாயற்கல்லால் மற்றொருவர்க்கு என்னைப் பேச ஒட்டேன்" என்கிறாள்.

"மத்தளம் கொட்ட வரிசங்கம்நின்றூத
முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்த
பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதனன்
வந்து என்னைக்
கைத்தலம் பற்றக்கனாக்கண்டேன்
தோழிநான்

என்றுதான் கண்ட கனவைத் தோழியிடம் கூறுகிறார்.

"கற்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ
திருப்பவளச்செவ்வாய்தான் தித்தித்
திருக்குமோ
மருப்பொசித்த மாதவன்றனவாய்ச்
சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன்
சொல்லாழி வெண்சங்கே"

என்று இறைவனையே உருகிப் பாடுகிறார்.

விஷ்ணுசித்தர் தன்மகளின் நிலையை இறைவனிடம் சொல்லிவேண்டுகிறார். திருவரங்கப்பெருமான் அவர் கனவில் தோன்றித் தாமே கோதையைத் திருமணம் செய்து கொள்வதாக கூறுகின்றார். வில்லிப்புத்தூரில் பெருமானும் பெரியதிருவடியின் மீது எழுந்தருளிக் கோதையை திருமணம் செய்துகொள்கின்றார். இத்தெய்வத்திருமணம் பங்குனி உத்தரநாளன்று நடைபெறுகின்றது. அன்றுமுதல் அரங்கமன்னார் கோதை ஆண்டாளுடன் வில்லிப்புத்தூரிலேயே கோயில் கொண்டு விளங்குகின்றார்.

## கோயில்

பெரிய கோபுரத்துடன் விளங்குகிறது, வில்லிப்புத்தூர் கோயில். கோயிலின் முன்வாயில் முதல் முதலில் இருப்பது பந்தல் மண்டபம். பின்மாதவிப் பந்தல் மணிமண்டபம், ஆண்டாள் சுக்கிரவாரக்குறடு ஆகியவற்றைக் கடந்து அர்த்த மண்டபம் நடுவில் உள்ளது. அதற்கு அடுத்து கருவறை. இங்குதான் நடுவில் அரங்கமன்னார் அவருக்கு வலப்பக்கத்தில் ஆண்டாளும் இடப்பக்கத்தில் பெரிய திருவடியிலும் எழுந்தருளியுள்ளனர். கோயிலுக்கு வடகிழக்கே ஆண்டாள் அவதரித்த நந்தவனம் உள்ளது. பெரியாழ்வார் சந்நிதி, நரசிங்கப் பெருமாள் சந்நிதி முதலியவை உள்ளன. ஆண்டாள் பிறந்த ஆடிப்பூரத்தன்று நான்கு ரதவீதிகளிலும் திருத்தேர் பவனிவரும். திருக்கோயில் கோபுரம் தமிழக அரசின் சின்னமாகக் காட்சி அளிக்கின்றது.

## ஆண்டாள் அருளிய திருப்பாவை

உனக்கே நாமாட்செய்வோம்

என்று இறைவனுக்குப் பணி செய்வதே பிறவியின் பயன் என்பது ஆண்டாளின் குறிக்கோள். அவர் அருளிய திருப்பாவை பக்தி இயக்கத்தில் உன்னதநிலையை உடையது. மாதங்களில் நான் மார்கழியாய் இருக்கிறேன் என்ருன் கண்ண பிரான். அந்த மார்கழித்திங்கள் வைகரைப்பொழுதில் எழுந்து நீராடிப் பாவைப் பாடல்களைப் பாடிநோன்பு நோற்று பெருமானை வணங்கும் வழி முறைகளை விளக்குகிருர். உலகளந்த பெருமானின் திரு வடியைப் போற்றிப்பாடினால் மாதம் மும்மாரிபொழியும் செல் வம் பெருகும் என்பதை

"ஓங்கி உலகளந்த உத்தமன்
பேர்பாடி
நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி
நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்
மும்மாரி பெய்து
ஓங்குபெருஞ் செந்நெலூடு
கயலுகளப்
பூங்குவளைப்போதில் பொறி-
வண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த
முலைபற்றி
வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளல்
பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோ
ரெம்பாவாய்
-திருப்பாவை-3

என்று பாடுகிருர்.

திருமாலின் பெருமைகளைத் தம் பாக்களில் எடுத்து இயம்புகிருர். அவனைப் பாடி வணங்கினால் முன்புசெய்த பிழைகளும் இனி செய்யும் பிழைகளும் தீயில் இடப்பட்ட தூசுபோல் அழியும் என்கிருர். மார்கழி மாதநோன்பிற்காக மாலே! மணி வண்ணு! எங்களுக்கு சங்கு, பறை, விளக்கு, கொடி, மேல் கட்டி விரிப்பு முதலியற்றை அருள்வாயாக என்பதாக அமைந்த பாடல்

"மாலே! மணிவண்ணு! மார்கழி
நீராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன
கேட்டியேல்
ஞாலத்தை எல்லாம் நடுங்க
முரல்வன
பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச
சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்
பாடுடையனவே
சாலப் பெரும்பறையே
பல்லாண்டிசைப்பாரே
கோலவிளக்கே கொடியேவிதானமே
ஆலின் இலையாய் அருளேலோ
ரெம்பாவாய்"
--திருப்பாவை-26

இன்றுமட்டுமன்று இன்றும் எவ்வளவு பிறவி எடுத்தாலும் உன்னோடு கூடியிருப்போம். உனக்கே அடிமைகள் ஆவோம்.

---

தெரிந்து கொள்ளுங்கள்

## திரிசூலம் உணர்த்தும் தத்துவம்

ஒவ்வொரு தெய்வ உருவத்தின் கைகளில் ஆயுதங்கள் இருக்கும். இந்த ஆயுதம் இறைவன் அல்லது இறைவியின் எல்லையற்ற தெய்வீகமான போராற்றல்களை உணர்த்துகின்றன. அந்த ஆயுதங்கள் பக்தர்களைக் காப்பாற்றும் பொருட்டு செயல்புரியும். விக்கிரக சாஸ்திர விதிகளின் படி கைகளில் ஆயுதங்களுடன் தெய்வ உருவங்கள் அமைக்கப்பெறுகின்றன.

இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி ஆகியவற்றை உணர்த்தும் அடையாளமாக திரிசூலம் விளங்குகிறது.

## ஸ்ரீராமனும் அனுமனும்

ஸ்ரீராமன் அனுமனை 'நீ என்னை எவ்வாறு நினைக்கிருய்?' என்று கேட்டார்.

என் உடலைப்பற்றி எண்ணும்போது நான் தங்கள் சேவகன். எனது ஜீவனைப் பற்றி நினைக்கும்போது நான் தங்களின் பகுதி. எனது ஆத்துமாவைப் பற்றி எண்ணிப்பார்க்கும்போது நான் உங்களோடு இணைந்துவிட்டவன். இருவரும் வேறல்ல" என்று பதிலிறுத்தான் அனுமன்!

--துளசி இராமாயணத்திலிருந்து

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

மற்ற விருப்பங்கள் எங்கள் மனத்தில் தோன்றுதபடி அருள்செய்வாயாக என்று

"சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்
பொற்றாமரையடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்துநீ
குற்றவேல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப்பறை கொள்வான் அன்று காண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன் தன்னோடு
உற்றோமேயாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்"

--திருப்பாவை 29

என்று போற்றிப் பாடுகிறார்.

## நாச்சியார் திருமொழி

காதற்பெருவெள்ளமான நாச்சியார் திருமொழியும் ஆண்டாள் அருளியவை ஆகும். நூற்று நாற்பத்து மூன்று பாசுரங்களைக் கொண்ட நாச்சியார் திருமொழி என்னும் பிரபந்தம் கண்ணனை அடைய ஏங்கித் தவிக்கும் ஆண்டாளின் பல்வேறு மனநிலைகளையும் எடுத்துக் காட்டுகிறது. அது பக்தி உலகில் உருவாகிய ஒரு கவியமுதம் ஆகும். திருமால் அர்ச்சையாய் அமர்ந்திருக்கும் தலங்கள் பல. அர்ச்சை என்பது உருவமாகும். அர்ச்சையாய் அமைந்த தலங்களில் திருமாலிருஞ்சோலை, திருவேங்கடம், திருவரங்கம் ஆகிய மூன்று தலங்களைப் பாடியுள்ளார். ஆண்டாள் காதலி நிலையிலிருந்து கொண்டு கண்ணனைத் தன்னிடம் வருமாறு குயிலைக் கூவும்படி வேண்டுகிறார்.

"மென்னடை அன்னம் பரந்து விளையாடும்
வில்லிபுத்தூருறைவான்றன்
பொன்னடிகாண்பதோரைசையினால் என்
பொருகயற்கண்ணிணைதுஞ்சா
இன்னடிசிலாடு பாலமுதூட்டி எடுத்த என்கோலக்கிளியை
உன்னோடு தோழமை கொள்ளுவன்
உலகளந்தான் வரக்கூடவாய்"

தலைவன் வந்து தன்னைச் சேர்த்துக்கொள்வான் எனில் "கூடலே நீ கூட வேண்டும்" எனக்கூறும் பாடல்

தெள்ளியார் பலர்கைதொழும் தேவனார்
வள்ளல் மாலிருஞ்சோலை மணாளனார்
பள்ளிகொள்ளுமிடத்தடி கொட்டிட
கொள்ளுமாகில் நீகூடிடுகூடலே.

என்று போற்றிப்பாடுகின்றார்.

மணவாளமுனிகள் ஆண்டாளைப் பற்றி அருளிய பாடல்,

அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சி நிற்கும் தன்மையளாய்ப்பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் பத்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து"

ஆண்டாள் அவதரித்த திருவில்லிப்புத்தூரின் பெருமையை

"கோதை பிறந்தஊர் கோவிந்தன் வாழும் ஊர்
சோதிமணிமாடம் தோன்றும் ஊர் நீதியால்
நல்லபத்தர்வாழும்ஊர் நான்மறைகள் ஓதும்ஊர்
வில்லிப்புத்தூர் வேதக்கோன் ஊர்"

என்னும் பாடலால் அறியலாம்.

சீர்மிகுந்த திருவில்லிபுத்தூரில் அவதரித்த ஆண்டாளை, சூடிக்கொடுத்த சுடர்கொடியை,

திருவாடிப்பூரத்து செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளைவாழியே
பெரும்புதூர் மாமுனிக்குப் பின்னானள் வாழியே
ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே
உயர் அரங்கற்கே கண்ணி உகந்தளித்தாள் வாழியே
மருவாரும் திருமல்லிவளநாடி வாழியே
வண்புதுவைநகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே'

என்று பாடித்துதித்து வணங்குவோமாக.

பெரியாழ்வார் திருவடிபோற்றி! ஆண்டாள் திருவடிகளே சரணம்!



## விண்ணப்பம்

'ஸப்தகிரி'யில் வெளியிடப்படும் சமயச் சார்பான கட்டுரைகளுக்கு அளிக்கப்படும் சன்மானத்தொகை கணிசமாக உயர்த்தப்பட்டுள்ளது. ஆகவே கட்டுரையாசிரியர்கள் தொடர்ந்து தங்கள் முழு ஒத்துழைப்பினை நல்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

--ஆசிரியர்.

# மார்கழி நீராடல்

திரு. ச. சுந்தரேசம் பிள்ளை - சிதம்பரம்.

மார்கழித் திங்கள் ஆம்! இது பனிமிகுந்த காலம். உச்சி முதல் உள்ளங் கால்வரை நடுங்க வைக்கும் காலம். கம்பளியும் கனற்சட்டியும் காவல் புரியும் காலம். இக்காலத்தில் அதுவும் அதிகாலையில் நீராட வேண்டும் என்கிறார்களே! இது என்ன நியாயம்! இக் கேள்வி நியாயமாகப் படுகிறது. ஆனால் பெரியோர்கள் சொல்லில் பிழை ஏதும் இருக்கமுடியாது. ஏதோ ஒரு உண்மையும் நன்மையும் கலந்து இருக்கவேண்டும். அவற்றைக் காண்பது நமது தலையாய கடமை.

ஐம்புலன்கட்கும் அடிமையானவன் அல்லற்படுவான். அவற்றை அடக்கியாள்பவன் ஆனந்தம் அடைவான். பனிக் காலத்தில் இயல்பாகவே உடல் அடங்கி ஒடுங்கி உறக்கம் கொள்வதிலேயே கழிப்பான். உழைத்துக் களைத்த உடம்புக்கு ஓய்வு தருவதே உழைப்பை உயர்த்தும் வழி. ஓய்வு எடுக்கத் தெரிந்தவனே உழைக்கத் தெரிந்தவன் என்ற சோவியத் பழமொழி உண்மை நிறைந்தது தான். ஆனால் நமது உடல் ஓய்விலேயே இருக்கவோ, உறக்கத்திலேயே இருக்கவோகூடாது. உரிய காலத்தில் எழுந்து கடமைகளை மேற்கொள்ள வேண்டும். இது சிறந்த பயனைத் தருவதுடன் நிறைந்த மகிழ்வையும் தரும்.

"வைகறை யாமம் துயிலெழுந்து
தாம் செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து
வாய்வதின்
தந்தையும் தாயும் தொழுதொழுக
என்பதே
முந்தையோர் கண்ட முறை"
--ஆசாரக் கோவை.

அறுபது நாழிகை ஒரு நாள். முப்பது நாழிகை பகல். முப்பது நாழிகை இரவு. இப்படி முப்பது நாள் கொண்டது ஒரு மாதம். பன்னிரண்டு மாதம் கொண்டது ஒரு வருடம். மனிதர்களாகிய நமக்கு ஒரு வருடம் தேவர்கட்கு ஒரு நாளாகும். அப்படி எனில் தை மாதம் முதல் ஆனி மாதம் வரை பகல் (அரை நாள்) ஆடி மாதம் முதல் மார்கழி மாதம் வரை இரவு (அரை நாள்) இந்த இரவு பகலைத் உத்ராயணம தட்சணயனம் என்கிறோம். தட்சணயனத்தின் கடைசி மாதம் தான் மதி நிறைந்த மார்கழி மாதம். இந்த மாதமே தேவநாளின்படி பொழுது விடிகின்ற பிராதக் காலமாகும்.

உழைக்கப் பகலையும் ஓய்வுக்கு இரவையும் கடவுள் கருணையால் நமக்குத் தந்துள்ளார். உழைத்து, இளைத்து, களைத்து, சளைத்த ஆன்மா ஓய்வு உறக்கத்திலிருந்து எழுந்து மீண்டும் செயற்பட வைக்க வேண்டுமல்லவா? உழைப்பும் ஓய்வும் ஒன்றன்பின் ஒன்றாகச் செயற்பட்டால் தான் வழ்க்கைச் சக்கரம் உருளும். எனவே தான் எல்லாம் வல்ல சிவபெருமான் ஆன்மாவைத் தூண்டி எழுப்பி தொழிற்படச் செய்கின்றான். அப்படி செய்யும் காலம் மார்கழி மாதம். இனியும் கண்ணைத் துயின்று அவமே காலத்தைக் கழிக்கலாமா?

## குபேரன்

திரு. N.C. கோபாலன் - சென்னை.

பிரம்மாவின் மானஸ புத்திர ரான புலஸ்தியருக்கும் திருணவிந்துவின் புத்திரிக்கும் 'விஸ்ரவா' என்பவர் பிறந்தார். இந்த விஸ்ரவாவின் குமாரனே 'குபேரன்'. நீண்ட காலம் தவம் செய்து தனாதிபதி பதவியை குபேரன் பெற்றார். இவர்தான் இலங்கைக்கு அதிபதியாக இருந்தார். இவருடைய மாற்றாந் தாயின் குமாரனே இராவணன். இவன் குபேரனிடமிருந்து ஆட்சியை கைப்பற்றி விட்டான் என்று இராமாயணம் கூறுகிறது. அதனால்தான் லங்காபுரியை 'குபேரபுரி' என்றுகூட அழைப்பர்.

குபேரன் யக்ஷர்களின் தலைவன் என்று பாகவதம் கூறுகிறது. மானிடனே இவனுடைய வாகனம். பௌத்த மதம் பரவியுள்ள சயாம், லாவோஸ், கம்போடியா போன்ற நாடுகளில் குபேரன் பௌத்தர்களால் வழிபடுகிறார். இவருடைய மனைவிகள் சங்க நிதி, பதுமநிதி. (சில்ப சாஸ்த்திரத்தில் குபேரனுக்கு ஒரு மனைவி என்றும் சங்கநிதி பதுமநிதி இருவரும் ஆண்கள் என்று கூறப்படுகின்றது.)

ஏண்டா! இன்னுமா தூக்கம்! எழுந்திரு! பல் விலக்கிக் காப்பியைக் குடி! பள்ளிப் பாடத்தைப் படி! என்று முன்னமே எழுந்திருந்த தாய் பிள்ளையை எழுப்புவதைக் காண்கிறோம். தொழிலில் செயற்பட்ட வைப்பதைக் காண்கின்றோம். பிள்ளையின் எதிர்காலம் ஏற்றம் பெற வைப்பதைக் காண்கின்றோம். இப்படித் தான் உலகிற்கெல்லாம் தாயாகிய உமாமகேசுவரி ஆன்மாக்கள் எல்லாம் தொழிற்படி துயில் உணர்த்துகிறாள். இதனை நினைவூட்டுவதே மார்கழி நீராடல்.

தலைமைஅலுவலர் துணைப் பணியாளர்களை ஏவி இயக்குவதுபோல் பரம கருணாநிதியாகிய சிவபெருமான் உலகத்தை இயக்க எட்டு மூர்த்தியாகின்றார்.

சிவன் மனோன்மணியாக, சூரியன் சர்வ பூததமணியாக, சந்திரன் பலப் பிரதமணியாக, வானை பல விகரணியாக, காற்று கலவி கரணியாக தீ காளியாக, நீர் ரௌத்திரியாக, நிலம் சேட்டையாக இப்படி அபர சக்திகளாக ஆகி, எட்டு மூர்த்திகளும் ஒவ்வொருவர் மூலமாக எழுப்பி காலை நேரத்தை நினைவூட்டி இயக்குகிறார். இதனால் உலகம் இயங்குகிறது. சர்வ சக்தியான பார்வதி தேவியின் அருட் பெருமை இதுவே.

இத்தகைய பிராதக் காலம் தான் விழிப்படையவும், மனம் தெளிவாக இருக்கவும், பேருதவி புரிகிறது. பல கவலைகளும் இல்லாத தூய்மையான நேரம் அதிகாலை நான்கு மணி முதல் ஐந்து மணி வரை. இந்த வேளை தேவ வேளை புண்ணிய வேளை. இது ஒவ்வொருவருக்கும் அமைய வேண்டும். இந்த வேளையில் கடவுள் வழிபாடு செய்வதால் புனிதமும், புண்ணியமும், நன்மையும் அனுதினமும் உண்டாகும்.

மார்கழி மாதம் ஒரு பீடைமாதம். இதில் எதனையும் தொடங்காதே! என்கிறார்களே. உண்மையா? பீடு உடைய (பெருமையமைந்த) மாதம் என்பதை சிலர் அறியாமல் பீடை மாதம் என்று பெயரிட்டு விட்டனர். தமிழர்கள் மலையைக் கயிறுக்குவதிலும் சொல்லைக் கொல்வதிலும் வல்லவர்கள் அல்லவா?

"மாதங்களில் நான் மார்கழி" என்று கண்ணபிரான் கூறியதையும், "மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாள்" என்று ஆண்டாள் அருளியதையும். "போற்றியாம் மார்கழி நீர் ஆடேலோர் எம்பாவாய்" என்று மணிவாசகப் பெருமாள் மலர்வாய் மொழிந்ததையும் நினைவு கொள்வோமாக, மார்கழி நீராடுவோர் பல மாதங்கள் நரம்பு வலுவுடன் திகழ்வர் என்ற அறிவியலார் கூற்றை எண்ணுவோமாக. மார்கழி நீராடி வழிபட்டு, மன மகிழ்வும், மனை வளமும், புண்ணியப் பயனும் பெற்று உய்வோமாக.



## உபவாஸம் என்றால் என்ன?

உபாவ்ருத்தஸ்ய பாபேப்யோ யஸ்து வாஸோ குணை: ஸஹ ।

உபவாஸ: ஸவிஜ்ஞேய: ஸர்வபோக விவர்ஜித: ॥

பாவங்கள் செய்வதைவிட்டு குணங்களோடு கூடியிருப்பதும் எல்லா சுகபோகங்களையும் விடுவதும் உபவாஸம் எனப்படும்.

இங்கு குணங்களாவன:-

தஜ்ஜாப்ய யஜநாப்யாஸ தத்கதா ஸ்ரவணாதய: ।

உபவாஸக்ருதா மேதே குணா: ப்ரோக்தா மநீஷிபி: ॥

மந்த்ர ஜபம், பூஜை கதா ஸ்ரவணம் முதலியவை உபவாஸத்தின் குணங்கள். ஆனால் ஆகாரம் புசிக்காமல் இருப்பதே உபவாஸம் என்பது வழக்கில் வந்துள்ளது. முக்கியமாக விரத தினங்களில் ஆகாரமில்லாமல் உபவாஸம் அனுஷ்டிப்பது மிகவும் சிறந்தது.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

# திருப்பாவையின் சிறப்பு

திரு. க. சுகுமாரன் - திருவாரூர்.

ஸ்ரீ ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவை தேன் தமிழின் தித்திக்கும் நூல்களில் முதன்மையானது. 'பக்திச் சுவைசொட்ட சொட்ட முத்திப் பதம் கிட்டக் கிட்டப் புனையப்பட்ட கவிதைகள் கொண்ட நறுமணச் சொல்மாலை திருப்பாவை. அதில் நாம் ஆண்டவனின் அவதார விசேஷங்களை அனுபவிக்கிறோம். செந்தமிழ்க் கவிதைச் சுவையைப் பருகுகிறோம். இப்படிப் பல பல இன்பங்களில் மூழ்கிப் பேரின்பத்தில் திளைக்கிறோம்.

இவ்கையில் நம்மைப் பேரின்பத்திற்கு அழைத்துச் செல்லும் ஸ்ரீ ஆண்டாளின் சிறப்பு அளவற்றது. வியாக்கியானச் சக்கரவர்த்தியான ஸ்ரீபெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீ ஆண்டாளின் பெருமையைப் பற்றி விவரிக்கையில் "தேக நலத்தில் சிரத்தையுடைய சாதாரண மனிதர்களைவிட ஆத்ம சொரூபம் அறிந்த ரிஷிகள் பன்மடங்கு உயர்ந்தவர்கள். ரிஷிகளைவிட ஆழ்வார்கள் பன்மடங்கு உயர்ந்தவர்கள். மற்றைய ஆழ்வார்களைவிட பெரியாழ்வார் எத்தனையோ மடங்கு உயர்ந்தவர்கள். அந்தப் பெரியாழ்வாரைவிட ஸ்ரீ ஆண்டாள் அநேக மடங்கு உயர்ந்தவள்" என்கிறார். எத்தனை மடங்கு உயர்ந்தவள் என்பதைக் குறிப்பிடும்போது, "பர்வதப் பரமானுவோட்டை வாசிபோரும்" அதாவது அவள் மலை, மற்றவர் தூசி என்று மிகவும் சிறப்பித்துச் சொல்கிறார். நமது பெரியோர்கள் ஆழ்வார்கள் எல்லோரையும்விட ஸ்ரீ ஆண்டாளுக்கு ஏற்றத்தைக் கொடுத்ததற்குக் காரணம் உண்டு.

நமது பக்தி நூல்கள் எல்லாம் நாயக நாயகி பாவத்தை அஸ்திவாரமாகக் கொண்டவை. ஆண்டவன் இயக்க நாம் இயங்குவதால் அவனை நாயகனாகவும், தங்களை நாயகியாகவும் கொண்டு அந்த உறவின் மூலம் பேரின்பத்தைக் கண்டார்கள் நம் பெரியோர்கள். "ஹிர் யதைகப் புருஷோத்தம ஸ்ம்ருதோ" - ஹரி ஒருவன்தான் புருஷோத்தமன் எனப்படுகிறான் - என்று ரகுவம்சத்தில் காளிதாசனும் சொல்கிறான். புருஷன் பெண் வேஷம் போடுவதைக் காட்டிலும் பெண்ணே பெண் பாத்திரத்தைத் தாங்குவது எத்தனை இயற்கை! ஆகவே நாயகிகளாகத் தங்களைப் பாவித்துக் கொண்ட ஆழ்வார்களைவிட, பெண்ணாகவே பிறந்த ஸ்ரீ ஆண்டாள், ஆண்டவனை நாயகனாக எண்ணி உறவாடி மகிழ்ந்தது சாலச்சிறந்தது அல்லவா! அதனால் தான் ஸ்ரீ ஆண்டாளின் தெய்வீகக் கற்பனைக்கு அதிக இயற்கையையும் அதிக ஏற்றத்தையும் பூர்வாசிரியர்கள் கொடுத்தார்கள். இந்த இயற்கையுடன் ஸ்ரீ ஆண்டாளுக்கு விரக்தியும் கலந்து கொண்டது. உன்னித் தெழுந்த என் தடமுலைகள் மானிடவர்க்கு என்று பேச்சுப்படில் வாழ்கில்லேன்" என்னுடைய அங்க லாவண்யங்கள். சிற்றின்பத்திற்கு என்று பேச்சு வந்தால் நான் உயிர்வாழ மாட்டேன் என்று பருவ வயதில் சொல்லுமளவுக்கு ஸ்ரீ ஆண்டாளின் மனப்பக்குவம் உயர்ந்திருந்தது. அத்தகைய உயர்ந்த மனத்திலிருந்து ஆண்டவனைப் பற்றி எழுந்த பேரின்பக் கனவுகள் பேரின்ப உறவுகள், கவிதைகளாய் வடிந்தன. அப்படி வடித்த கவிதைகளில் முப்பது திருப்பாவை என்னும் பக்திக் கிரந்தம்.

திருப்பாவைக் கிரந்தம் ஆற்றுப்படை என்ற இலக்கண விதியைச் சாரும். 'ஆற்றுப்படுத்துதல்' என்பதற்கு வழி தெரிந்தவன் ஒருவன் வழி தெரியாதவனுக்கு வழிகாட்டி அழைத்துச் செல்லுதல் என்பது பொருள். ஆண்டவனை அடையும் வழியை அறிந்த ஸ்ரீ ஆண்டாள் அவ்வழி அறியாத நமக்குப் பகவத் கைங்கர்ய வழியைக் காட்டுகிறாள். அதாவது ஆற்றுப்படுத்துகிறாள். ஆகவே இந்தக் கிரந்தம் 'ஆற்றுப் படை' என்ற விகுதியைச் சாரும். இந்தத் திருப்பாவை கிரந்தத்தில் 'பாவை நோன்பு' என்ற முகாந்திரத்தை வைத்துக் கொண்டு ஸ்ரீகிருஷ்ண பகவானுடன் ஆய்ச்சியர்கள் எப்படி கலந்து உரையாடினார்கள் என்ற கதையைச் சொல்கிறாள் ஸ்ரீ ஆண்டாள். பாவை நோன்பு என்பது பழந்தமிழர்கள் அனுஷ்டித்து வந்த நோன்பு. மார்கழி மாதத்தில் பருவப்பெண்கள் மழைபெய்து நாடு செழிக்கவும், தகுந்த கணவனைத் தாங்கள்

பெறவும், ஆற்றுக்குச் சென்று நீராடி அங்குள்ள ஈர நுண் மணலால் பாவையொன்றைப் பிடித்து அதை வழிபடுவது வழக்கம்.

இந்த நோன்புக்கு வேதப் பிரமாணம் கிடையாது. ஆகவே இதற்குப் பிரமாணம் சொல்லும் பெரியவாச்சான் பிள்ளை, இந் நோன்புக்கு மூலம் என்னென்னில், மீமாம்ஸையிலே ஹோளாதிகரண நியாயத்தாலே சிஷ்டாசார ஸித்தம்'' என்றும் கூறுகிறார். கோளை கோளகம் என்ற காமன் பண்டிகை வடநாட்டில் வசந்த ருதுவில் கொண்டாடப் படுகிறது. இதற்கு வேத விதி கிடையாது. ஆனால் பெரியவர்கள் காலம் முதல் அனுஷ்டானத்திலிருந்து வருகிறது. ஆகவே வேத விதி யில்லாது போனாலும் இது செய்யத்தக்கது என்று தீர்மானிக்கப்பட்டது. அந்த நியாயம் பாவை நோன்புக்கும் உண்டு என்று தீர்மானிக்கிறார் ஸ்ரீ பெரிய வாச்சான் பிள்ளை. இது சிஷ்டாசார ஸித்தம் பெரியவர்கள் அனுஷ்டித்தது. ஆகவே அனுஷ்டிக்கத் தகுந்தது' என்று சொல்கிறார். ஸ்ரீஆண்டாளும் இதையே, மேலையார் செய்வனகள் என்று திருப்பாவையில் குறிப்பிடுகிறார்கள்

இந்தப் பாவை நோன்புக்கு வேத ஆதாரமில்லாவிட்டாலும் புராண ஆதாரமிருக்கிறது. ஸ்ரீமத் பாகவதம், தசமஸ்கந்தம், 22-ஆம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டுள்ள கார்த்தியாயினி விரதமும் இதைப் போன்றதே. கோகுலத்துப் பெண்கள் விடியற்காலையில் ஒருவரையொருவர் அழைத்துக்கொண்டு யமுனையில் நீராடி ஆற்று மணலில் தேவி சிலை பிடித்து நோன்பு நோற்று ஸ்ரீகிருஷ்ணனையே பர்த்தாவாக அடைந்தார்கள் எனக்கூறப்படுகிறது.

பாவை நோன்புக்குச் சங்க நூல்களிலும் ஆதாரமிருக்கிறது. இதை மார்கழி நோன்பாகிய 'தைந்நீராடல்' என்று பழந்தமிழர்கள் அழைத்து வந்தார்கள். பரிபாடலில் வையை ஆற்றின் சிறப்புக்கூறும் பாடலிலே ஆசிரியர் நல்லந்துவனார், "தாயருகா நின்று தவத் தைந் நீராடுதல் நீயுரைத்தி வையை நதி" என்று தெரிவிக்கிறார். கன்னிப்பெண்கள் சங்க காலத்தில் தைந்நீராடி நோன்பு நோற்றதை இப்பாட்டு உணர்த்துகிறது. இது தவிர பெண் பிள்ளைப் பாட்டின் செய்தி கூறும் பிங்கலந்தை சூத்திரத்துள், பேணும் சிறப்பில் என்று தொடங்கும் பாட்டில், 'பனி நீர் தோய்தலும் பாவையாடலும்' என்ற அடி வருகிறது.

பாவை நோன்புக்கு இப்படியாக பழைய சான்றுகள் பல உள்ளன. இது வடநாட்டிலும் தென்னாட்டிலும் முன்னோர் அனுஷ்டித்து வந்த ஒரு விரதம் என்பது தெளிவாகிறது. அத்தகைய ஒரு நோன்பைக் காரணமாக வைத்துக் கொண்டு ஸ்ரீஆண்டாள் நமக்கு அருமையான இந்த முப்பது பக்திப் பாடல்களை அளித்திருக்கிறாள். திருப்பாவை பாடல்களை நாள்தோறும் பாடி திருவருளைப் பெறுவோம்.



<u>தினசரி நிகழ்ச்சி நிரல்</u>

## ஸ்ரீகோதண்டராம சுவாமி கோயில், திருப்பதி.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| காலை 5-00 | முதல் | காலை 5-30 | வரை | - | சுப்ரபாதம் |
| காலை 5-30 | முதல் | காலை 8-00 | வரை | - | ஸர்வ தரிசனம் |
| காலை 8-00 | முதல் | காலை 8-30 | வரை | - | தோமாலா (ஏகாந்தம்) |
| காலை 8-30 | முதல் | காலை 9-00 | வரை | - | ஸஹஸ்ரநாம அர்ச்சனை (ரூ. 2/- நபர் ஒருவர்க்கு) |
| காலை 9-00 | முதல் | காலை 9-30 | வரை | - | முதல் மணி, பலி |
| காலை 9-30 | முதல் | காலை11-00 | வரை | - | ஸர்வ தரிசனம் |
| காலை11-00 | முதல் | காலை11-30 | வரை | - | 2-வது மணி |
| காலை11-30 | முதல் | மாலை 6-00 | வரை | - | ஸர்வ தரிசனம் |
| மாலை 6-00 | முதல் | இரவு 7-00 | வரை | - | இரவு கைங்கர்யங்கள், இரவு மணி |
| இரவு 7-00 | முதல் | இரவு 8-40 | வரை | - | ஸர்வ தரிசனம் |
| இரவு 8-40 | முதல் | இரவு 9-00 | வரை | - | ஏகாந்த சேவை |

**குறிப்பு** : (சனிக்கிழமைகளிலும், புனர்வசு நட்சத்திர நாளிலும் மேற்கூறிய நிகழ்ச்சிகளில் சிறிதே மாற்றம் இருக்கும்.)

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

## தோ

தோக்கை - முன்றுனை; புடவைத் தலைப்பு
தோட்டம் - உழுமிடம்
தோட்டி - அங்குசம்; கதவு
தோடகம் - தாமரை
தோடு - புஷ்பம்; இதழ்; காதணி
தோண்டல் - ஊற்று; தோண்டப்படுவதால் தோண்டல் - ஊற்று என்றபடி
தோத்திரம் - துதிநூல்
தோத்திருக்கிற - ஈடுபட்டிருக்கிற; தோற்றிருக்கிற
தோதவத்தி - பரிசுத்தமாய் தோய்த்து உலர்த்தின வஸ்திரம். தோத-தௌதம்; வத்தி-வஸ்திரம். பிராம்மணர்களுக்குத் தகுதியானது தோய்த்து உலர்த்தின ஆடை
தோப்பு சமைத்தல்- இருப்பிடம் வகுத்தனர்
தோமரம் - எறியீட்டி
தோய்தல் - ஆராய்தல்; நனைதல்; மூழ்குதல்
தோய்விலன் - தொடுதல் இல்லாதவன்
தோய - அநுபவிக்க
தோயம் - நீர்; தோயல் - உறவு
தோய்தர - தொட, படியும்படி
தோயாவின்தயிர் - மிகவும் தோயாத இனிய தயிர்
தோயாவேல் - சேராவாகில், அணையாவாகில்
தோரணம் - குரங்கு; வாசலில் கட்டும் மாவிலை அலங்காரம்
தோல் - யானை; வார்த்தை; புகழ்
தோல்குரம்பை - தோலாகிற உடல்; தோலாகிற குடிசை
தோல்புரையே போதல் - மேலோடு போதல்
தோலாத - வெற்றியறியாத
தோலைமேவி - தோலால் மூடி
தோழி - செவிலி; பாங்கி; அரக்கு
தோழன்மார் - சமான வயதுடையராய், நண்பர்களாய் எப்போதும் பிரிந்திருக்கமாட்டாதவர்கள்.
தோழிப்புழுங்கல் - கல்யாணத்தில் மூன்றும் நாள் அம்மான் (மாமா) அகத்தில் எல்லாருக்கும் பொங்கல் அளிக்கை. அம்மான் தோழிப்பொங்கல் என்று மூன்றும் நாள் செலவு முழுவதும் அம்மானுடையதாகும்.
தோள் தீண்டி - தொடர்ந்து பற்றுவது; இணையான; ஒப்பான; நெருக்கமாக.
தோள் நலம் - தோளழகு; தோள் தவழும் இன்பம்.
தோள்படிகொள்ளுகை - சுமை எடுக்கிறவன் சுமையைத் தோளிலே படிய வைத்துக் கொள்ளுகை. ராஜா யானை மீது ஏறும் போது பாகன் தோளைப் படியாகக் கொள்வது.
தோள் மாறுதல் - பெருமாளை எழுந்தருளப் பண்ணும் போது ஒரு தோள் நொந்தபோது மற்றொரு தோளிலே மாற்றிக் கொள்ளுதல்.
தோள் வந்தி - தோள்வளை - தோளுக்கு இடும் ஆபரணம்.
தோளாத மாமணி - துளையாத மணி; ஒளி மழுங்காத ஜாதி ரத்தினம்.
தோளி - தோள் அழகையுடையவள்; டோலி; அரக்கு
தோற்புரை - மேலெழ
தோற்றத்திலே - முதலிலே; ஆரம்பத்திலே
தோற்றக்குழி - கர்ப ஸ்தானம்
தோற்றக்கேடு - தோற்றமும் கேடும்
தோற்றம் - அவதாரம்; அழகு; மிகுதி; கானல்; புகழ்; ப்ரகாசம்
தோற்றத்தாய் - அழகுடையவ்ன்
தோற்றம்பு - மேலெழுப்பட்டுப் போவது
தோற்றரவு - ஆரம்பம்
தோற்றல் - பிறப்பு;தோன்றல்;தோகை
தோற்றி - முதலாக
தோற்றியேயாகிலும் - அவதாரம் பண்ணியேயாகிலும்
தோற்றிருந்தேன் - தோல்வியடைந்திருந்தேன்
தோற்றினாய் - படைத்தான்
தோற்றுவதி - தோற்றுவியாய்
தோறு - சோறு
தோன்றல் - அரசன்; மூத்தோன்;

பிள்ளை; அழகு; ராஜாவினுடைய மனைவி; முல்லை நிலத்தலைவன்

தோன்றியதோள் - சிறப்பானதோள்

தோன்றி - செங்காந்தள்; நெல்வி; உதிரம்

தோன்றிகர் - வியாபாரம் செய்பவர்

தோன்றுதல் - பிரகாசித்தல்

தோன்றிற்றது முதலா - பிறந்தது முதல்

தோஷம் - குற்றம்

## ந

நக்க - சிரிக்க

நக்கபிரான் - திகம்பரனாய் ஈச்வரனாக பிரசித்திபெற்ற ருத்ரன். நக்நன் என்ற வடசொல் நக்கன் ஆயிற்று

நக்கரைந்து - அழிந்து

நக்கன் - ருத்ரன்; துணியில்லாதவன்

நக்கரிக்கை - நகருகை

நக்கு - சிரித்து

நக்குண்டார் நாவெழாரிறே - நக்கி ருசி பார்த்தவர்கள் யாதும் எதிர்த்துப்பேசாமல் அடங்கிக்கிடப்பர்.

நகட்டுச் சந்திரன் - களங்கத்தோடு கூடிய சந்திரன்

நகடு - சோபை; வியாதி; நிறவேறுபாடு

நகந்தாய் - நகத்தையுடையவன்

நகரான் - நகரத்தில் இருப்பவன்

நகரிழைத்து - நகரமாக்கி; கோயிலாகக் கொண்டு

நகழ்ந்து - நகர்ந்து

நகுதல் - சிரித்தல்

நகும் பரிசு - ஏளனம் செய்யும் விதம்

நகுவாய் மலர் - கழிய அலர்ந்த மலர்

நகை - பல்வரிசை; சிரிப்பு

நங்கட்கு - நமக்கு

நங்கூரம் - இரும்புக் கலப்பை

நச்சரவு - விஷப்பாம்பு

நச்சி - விரும்பி

நச்சிலை - திருநெற்றி

நசை - ஆசை

நஞ்சீயர் - மேல்நாட்டுக்காரரான வேதாந்தி. மாதவாசார்யர் என்ற பெயர். இவர் பட்டர் என்னும் ஆசார்யரின் சீடராகி, துறவறம் பூண்டு நஞ்சீயர் என்ற திருநாமம் பெற்றார்.

நஞ்சுடலம் - உடல் நைந்தபடி / நொந்தபடி

நஞ்சுலாவிய வேல்- திருஷ்டி விஷம் போல் இருக்கிற வேல். திருஷ்டி விஷம் - விஷப் பார்வை. விஷம் கடித்தால் கொட்டினால் கொல்லும். விஷப் பார்வை எட்ட இருந்து பார்த்தாலே கொல்லும். உடலில் படாமல் கண்ணாலே பார்த்தமாத்திரத்திலே கொல்லும் கூர்மையுடைய வேல்.

நட்ட பாஷை - பண் விசேஷம்

நட்டம் - நடு

நட்பாகுவர் - பந்துக்களாவர்; நண்பராவர்

நடந்த நல்வார்த்தை - பயமில்லாமல் எழுந்தருளின படியைப்பேசின உயர்ந்ததான மகாபாரதம்

நடந்துழக்கி - உலாவித்திரிந்து

நடமாட்டம் - கூத்தாட்டம், நடமாடுகிற ஆட்டம் - கூத்து

நடலை - துக்கம்; வஞ்சனை; பொய்; நோய்

நடாவுதல் - செலுத்துதல்

நடுவிட்ட வாசல் - இரு வீடுகளுக்கு ஒரு சுவராய் அதன் நடுவே அமைந்த வாசல்

நடுவில் ஆய்ச்சி - கைகேயி

நடுவில் பெருங்குடி- பாகவதாள்

நடைகொள்கை - செய்வதை விட்டுவிடுகை

நடைச்சக்கரவத்து - நடத்தைக்கு வருது ஊதுகை 'நடையழகுக்கு சக்கரவர்த்தியாய் இருப்பவன்' என்று விருது பிடிக்கை

நடைப்பலி - தினமும் செய்யவேண்டிய ஐந்து மகாயக்ஞம். பலி-பூஜை

நடைபாவாடை - ஆளவந்தார் பரமபதித்த போது அவரை எழுந்தருளப் பண்ண நடப்பதற்காக விரித்த துணி. நடைபாவாடை விரிப்பது ஒரு கௌரவம். துணிகளை விரித்து அதன்மேல் நடக்கச்செய்வது.

நடையார் நடையினார் - நடப்பவர்கள்

நடையாவுடை - ஸ்வபாவமாக உடைய

நடையிலே நடைகொள்வர் - நடையழகாலே ஈடுபடுத்துவார்

நடையொன்றில்லா - மரியாதையில்லாத; நெறியில்லாத

நடைவிளங்கு தமிழ் - உலக நடையிலுள்ள தமிழ். உள்ளில் அர்த்தத்தில் இழியவேண்டாதே, பதச்சேர்த்

| | |
|---|---|
| | தியும் பார்க்கவேண்டாதே; நடைதானே ஈடுபடுத்துகிற தமிழ் |
| நண்ணுகை | - கிட்டுகை |
| நண்ணுதல் | - அணைதல் |
| நண்ணுதொழியேன் | - பெருவிடில் தரியேன் |
| நண்ணுநாள் | - கிட்டாத நாள் |
| நண்ணிலாவகை | - கிட்டாதபடி |
| நணுகுதும் | - கிட்டக்கடவோம்; கூடுவோம் |
| நணுங்குகை | - மதுரமாகப்பாடுகை; நெருங்கிக் கலக்கை |
| நத்தம் | - ஊர்; கிராமம் |
| நந்த | - அழியும் படியாக |
| நந்தர் | - இடையர் |
| நந்தல் | - ஆக்கம்; கேடு |
| நந்தனார் களிறு | - நந்தகோபருக்குத் தன் செயற்கரிய செயலாலே எப்போதும் ஒக்க இனியனான கண்ணன் |
| நந்தாத கொழுஞ்சுடர் | - இடைபீடில்லாத ஒளியை உடையவன் |
| நந்தா நரகம் | - பிறவியாகிய நரகம். அழியும் நரகம் ஒன்று உண்டு. அதாவது பண்ணின கர்மத்துக்குப் பலம் அநுபவம் பண்ணினவாறே விட்டடிக்கும் படியாய் இருக்கும் யமனுடைய நரகம். அப்படியல்லாமல் பிறவி எடுப்பதற்குக் காரணமான அறிவின்மை முதலானவற்றுக்கு ஒழிவின்மையால் மாறாதே அநுபவிக்கும் பிறவியாகிறது நரகம். |
| நந்தாவண்கை மறையோர் | - நந்தாத - நசியாத ஒன்றாகி ஏற்றத்தைச் சொல்லி, ஏற்றமுடைய வள்ளல் தன்மை கொண்ட பிராம்மணர்கள் |
| நந்தா விளக்கம் | - இடைவீடின்றி உருவச் செல்லுகிற விளக்கு |
| நந்தா விளக்கு | - திரியும் எண்ணெயும் புகையுமான அழுக்கின்றி, ஒளியே ஒரு வடிவு கொண்டற்போலே இருக்கிற ஸ்வரூபத்தையுடைய எம்பெருமான் |
| நந்திபுர விண்ணகரம் | - 108 திவ்ய தேசங்களுள் ஒன்று. அந்யபரனான நந்தி அநந்ய பரனாக (வேறு ஒன்றில் ஊற்றமல்லாது எம்பெருமானிடத்தே ஊற்றம் கொண்டு) அடிமை செய்து இருக்கிற தேசம். நந்தி - சிவபக்தன் |
| நந்திருவுடையடிகள் | - நமக்கே உறுப்பாய், திருஸ்ரீ உடைய, ஸ்ரீமானான அடிகள் - ஸ்வாமிகள் |
| நந்து | - சங்கு, நத்தை |
| நந்துவிக்கும் வேங்கடம் | - (பாபங்களை) உருத்தெரியாதபடி அழிக்கும் வேங்கடம் |
| நந்தை | - கபிலைப்பசு; ஏகாதசி திதிகள் |
| நப்பிளிக்கை | - சிரிக்கை; ஏளனம் பண்ணுகை |
| நப்பின்னை | - கும்பனுக்குப் பின் பிறந்தவள் பின்னை; நீளாதேவி; கீரர் நக்கீரர் என்பது போல பின்னை நப்பின்னை என்று விரிந்தது. |
| நம் | - வணக்கம் |
| நம் சேவகனார் | - கையிலக்கைக்குச் சேவிக்குமவன் கையிலக்கை - கைக்கூலி |
| நம்பர் | - நம்பப்படுமவர்; நமக்கு பற்றப்படுமவர் |
| நம்பி | - பூர்ணன்; மிடுக்கு உடையவன் |
| நம்பரமன்று | - நமக்குப் பரமன்று நமக்கு ஆளப்படுமன்று |
| நம்பரமன்றே | - நம்மால் தலைக்கட்டப் போகாது |
| நம்பரமே | - நம்மால் செய்யப் போவதோ |
| நம்பாவை | - நம்முடைய நோன்பு |
| நம்பி மூத்தபிரான் | - பலராமனுக்குப் பெயர் கண்ணனுக்கு அண்ணனாகையாலே மூத்தபிரான் |
| நம்பிரான் | - நமக்கு பெரிய உதவி செய்பவன். குதிரை நம்பிரான் யானை நம்பிரான் என்று குதிரை வாகனம் யானை வாகனங்களுக்குப்பேர் |
| நம்பெருமாள் | - நம்முடைய பெருமான்; திருவரங்கத்து எம்பெருமான்; அரங்கநாதன் |
| நம்மது | - நம்முடையது |
| நம்மன் | - பூதங்கள்; யமபடர் |
| நமன்று | - சேவித்து |
| நம்பையல் | - நம்முடைய பையல் |
| நம்மாணி | - நம்பிள்ளாய்! மாணி-சிறுவன் |
| நம்மிடை | - நம் பக்கல்; நம்மிடம் |
| நம்முடை வாழ்வு | - வைணவ ஸம்பத்து; ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ |
| நம்மை வடுப்படுத்தும் | - இதுக்கு முன்பு ஒரு பழிப்பற்று இருந்த நம்மை வடுப்படும்படி பண்ணும் குற்றத்தை ஏற்படுத்தும் |
| நம | - எனக்கு அன்று, அவனுக்கு, தமக்காக இருக்கும் இருப்பைக் கழிக்கிறது. எனக்குரியனல்லன். |

| | | |
|---|---|---|
| நமபுரம் | - | யமபுரம |
| நமஸ்காரமாமித் தனை | - | குற்றமாமித்தனை. இழிவுச் சிறப்பு |
| நமன் தமர் | - | யமபடர் |
| நமர்களுள்ளீர் | - | எம்மோடு சம்பந்தமுடைய ரான நீங்கள் |
| நமன்றெழும் திரு-வேங்கடம் | | வணங்கி எழுந்து இருக்கத் தகும் திருவேங்கடம் |
| நமுக | - | குழையு, உருக |
| நமுகுகை | - | குழைலிக, உருகுகை |
| நமுசி | - | மகாபலியின் பிள்ளை |
| நமையாமல் | - | அடக்காமல் |
| நமை | - | ஒளி, தினவு |
| நமைத்தல் | - | தினவெடுத்தல் |
| நமைப்பு | - | தினவு |
| நமோ நாராயணுய- | | தன் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்து, அதற்குத் தக்க கைங்கர்யத்தைப் பெற வேண்டுமென்ற பிரார்த்தனையைக் காட்டும் திருமந்திரம். |
| நயக்கை | - | ஆசைப்படுகை |
| நயந்து | - | ஆதரித்துக்கொண்டு |
| நயன பாஷை | - | கண்ணுலே தெரிவித்தல் |
| நயப்புடைய நா | - | நயம்-மென்மை, நீர்மை அதனையுடைய நாக்கு |
| நயமுடை நடையனம் | - | நயம்-அழகு, அழகான நடையுடைய அன்னம் |
| நயனத்தன் | - | கண் அழகையுடையவன் |
| நயாசலன் | - | நயம்-நீதி, அதற்கு அசலன்-குலைதவில்லாதவன், அதாவது நீதி வழுவாதவன். |
| நரகராசன் | - | நரகத்தைப் போக்குமவன் |
| நரகன் | - | நரகாசுரன் |
| நரகாந்தகன் | - | நரகாசுரனை வதம் செய்தவன் |
| நரகு | - | நரகம் |
| நரநாராயணன் | - | பால்குடிக்கும் குழந்தைக்காகக் குடிநீர் குடிக்கும் தாயைப்போலே ஜீவாத்மாக்கள் உய்வதற்காகத் தவம் செய்பவன்; தவமாவது சிஷ்ய ஆசார்ய முறையைப் பின்பற்றுகை அதாவது நரனான தானே சீடனாய் நாராயணனான தானே ஆசார்யனாய் இருந்து அனுஷ்டித்துக் காட்டுகை |
| நரம் | - | மனிதப்பிறவி |
| நரம்பில்லாதபடி | - | உருத்தெரியாதபடி |
| நரம்பு | - | வீணை முதலானவற்றின் தந்திக்கம்பி; தாரை, கருத்து, ரஸதாரை. |
| நரன் | - | நாராயணனுடைய அம்சமான நரன் |
| நரமேதம் | - | யுத்தம் |
| நரலை | - | கடல |
| நரிப்புடைக்கொரு பாகுடம் | - | நரிக் கூட்டத்திற்கு ஒரு ருசியான உணவு |
| நரிப்பூணூலிடுதல் | - | குட்டைப்பூணூலிடுதல்; நரிக்கு பூணூலைப் போட்டு ஒரு அதிகாரம் கொடுத்தாற்போலே உபநயனமாகாத சிறுவர்களுக்குக் குட்டைப் பூணூலிடுவதுபோல |
| நரைதிரைமாறி | - | நரை-கிழட்டுத் தனம், திரை-உடம்பிலே நரம்பு படைக்கை, இளமையை அடைந்து |
| நல்கல் | - | கொடுத்தல், படைத்தல் |
| நல்க வேண்டும் | - | தந்தருளவேணும் |
| நல்காப்பான் | - | காப்பாற்றுவான் |
| நல்கிற்றையெல்லாம் | - | கொடுத்ததையெல்லாம் வைத்ததையெல்லாம் |
| நல்குதீரோ நல்-கீரோ | | உதவி செய்கிறீர்களோ, உதவி செய்யாமல் இருக்கிரீர்களோ |
| நல்குரவும் செல்-லும் | | வறுமையும் செல்வமும் |
| நல்குறுங்குடி | - | நல்-உயர்ந்த, கண்-இடமுடைய திருக்குறுங்குடி என்னும் திவ்ய தேசம், விசாலமான நல்லகுருங்குடி. |
| நல்தரித்தல் | - | நன்றாக தரித்திருத்தல் |
| நல்புவி | - | நல்ல பூமிப்பிராட்டி |
| நல்லங்கம் | - | நல்ல வடிவு |
| நல்லடி | - | அழகிய திருவடி |
| நல்லடிக்காலம் | - | நன்மைக்கு மூலமான காலம் |
| நல்லடிப்போது | - | விலக்ஷணமான, பரம போக்யமான திருவடித்தாமரை |
| நல்லடியவர் | - | இறைவனுக்கு அந்தரங்கர் |
| நல்லதோர் சாந்தம்- | | கோயிற்சாந்து, மாளிகைச் சாந்து |
| நல்லதோர் சோறு- | | இட்டவன் இட்டோம் என்று இருத்தல், உண்டவன் இதுக்கு என் செய்வது என்று நினைத்தல் செய்யாத சோறு. அதாவது தாய் பிள்ளைக்கு இடும் சோறு நல்லதோர் சோறு. |
| நல்லபதம் | | பாகவதர்களுக்கு அடிமையாயிருக்கும் தன்மை. அடியார்க்கு அடியராகை பாகவத சேஷத்வம் |



(தொடரும்)

# ஸஹஸ்ர நாமமும் பாவை நாமமும்

திரு. ஆர்.பி. சாரதி - குரோம்பேட்டை.

எல்லா தர்மங்களிலும் சிறந்த தர்மம் ஸஹஸ்ர நாம கீர்த்தனம்தான்' என்று தருமர் பீஷ்மருக்குச் சொன்னார். பகவான் ஸ்ரீகிருஷ்ணரே விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தைச் செவிமடுத்து ஆமோதித்த பெருமை இதற்குண்டு. ஆதி சங்கரரும், ஸ்ரீமத் ராமாநுஜர் ஆணைப்படி பராசரபட்டரும், உரையருளிய சிறப்பும் இதற்குண்டு.

'அடி தொழுது, ஆயிர நாமம் சொல்லி' வளர்த்த பெரியாழ்வாரின் புகழ் மகள் கோதையும் தன் திருப்பாவையில் பரமன் அடி பாடி, உத்தமன் பேர்பாடி, கேசவனைப் பாடி, மனதுக்கினியானைப் பாடி, பங்கயக் கண்ணனைப் பாடி, மாயனைப்பாடி, நாமம் பலவும் நவின்று அர்ச்சிக்கிறாள்.

பேராயிரத்தான் நாமங்கள் சில திருப்பாவையில் கோதையின் சங்கத்தமிழ் வாக்கில் சுடர்விடுவதைக் காண்பது இனிய ஞான பக்தி அநுபவமாகும்.

'மார்கழித் திங்கள்' என்று தொடங்கும் முதல் பாவைப் பாடலில் திருஎட்டெழுத்து என்று போற்றப்படும் 'நாராயணனே' என்ற திருநாமம் பேசப்பட்டு விடுகிறது. இதே திருநாமம் மீண்டும் ஏழாவது பாடலில் நாராயணன் (மூர்த்தி) என்றும், பத்தாம் பாடலில் 'நாற்றத் துழாய்முடி நாராயணன்' என்றும் போற்றப்படுகிறது. பாவையில் மூன்று முறை பேசப்பெறும் நாராயண நாமம் ஸஹஸ்ர நாமத்தில் 245ஆவது திருநாமமாக உரைக்கப்படுகிறது. இதற்கு 'பன்னிரு வ்யூஹத் திருநாமங்களில் ஒன்று' என்ற சிறப்பும் உண்டு.

57: ஸுப்ரஸாத: ப்ரஸந்நாத்மா
விச்வத்ருக் விச்வபுக்விபு:
ஸத்கர்தா ஸத்க்ருதஸ் ஸாதுர்
ஜந்ஹுர் நாராயணோ நர:

'நாராயண' என்ற நாமத்துக்கு நயமான உரை கண்டனர் நம் முன்னோர். 'நாரம் எனும் ஆத்மாவை இருப்பிடமாகக் கொண்டு அதில் நிறைந்திருப்பவர்' என்றும் 'நரர்களாகிய ஜீவன்கள் ஒடுங்கும் இடம்' என்றும், 'மூலப் பிரகிருதிக்கு முற்பட்டவர்' என்றும், 'பிறவி எனும் விஷத்தீண்டலைப் போக்கவல்லவர்' என்றும் "நரன் எனப்படும் ஆத்மாவிலிருந்து தோன்றிய ஆகாசம் முதலான பஞ்சபூதங்கள் தனித்தனியாக இருந்து வெளித்தோற்றம் பெருமுன், அம்மூலதத்துவங்கட்குள் புகுந்து, அவற்றைத் தன் இடமாக்கிக் கொண்டு படைப்பைத் தொடங்கியவர்" என்றும் பொருள் கண்டனர்.

இத்துணை ஆற்றல் கொண்ட நாமதாரி நாராயணனால் மட்டுமே பறைதர இயலும் என்ற பாவை வாக்கு சத்திய வாக்கு அல்லவா?

இதே பாடலில் இன்னொரு நாமம் 'இளஞ்சிங்கம்'. யசோதை 'இளஞ்சிங்கம்'. இந்தச் 'சிறிய சிங்கம்' 23ஆம் பாடலில் 'சீரிய சிங்க'மாகிறது.

ஆம், சிங்காதனத்துக்கு வந்து அமர அழைக்கும் போது சீரிய சிங்கமாவது இயல்பு தானே? ஸஹஸ்ர நாமத்தில் 'ஸிம்ஹ' என்ற திருநாமம் இரு முறை கூறப்படுகிறது. (நா. 200, 488)

53. அம்ருத்யுஸ் ஸர்வத்ருக் ஸிம்ஹ..
83. கபஸ்தி நேமிஸ் ஸத்வஸ்தஸ்
ஸிம்ஹோ..

சிங்கம் போன்ற வீரம் உள்ளவர், எதிர்ப்பவரைக் குதறி மாய்ப்பவர், இரணியனை வதம் செய்த நரசிம்ஹர் என்றெல்லாம் உரை காணப்படும் நாமம் இது.

பகைவரை மட்டுமல்ல, பக்தர் பாவங்களையும் வதைப்பவராம் ஸிம்ஹர்!

திருப்பாவையின் இரண்டாம் பாசுரமான 'வையத்து வாழ்வீர்காள்' பாடலில் 'பாற்கடலில் பையத்துயின்ற பரமன்' என்றும், 'ஆலின் இலையாய்' எனக் குறிப்பாக 26ஆம் பாடலிலும் 'பரமாத்மா' பேசப்படுகிறார்.

இத்திருநாமம் ஸஹஸ்ர நாமத்தில் 11ஆம் நாமமாகப் போற்றப்படுகிறது.

33. பூதாத்மா பரமாத்மா...

பரமாத்மா எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்டவர். காரணமான உலகும், காரண மூலப் பிரகிருதியும் எவரிடத்துத் தோன்றினவோ அவர் பரமாத்மா. காலத்துக்குக் கட்டுப்படாத நித்யர்; ஆசைகட்குக் கட்டுப்படாத சுத்தர்; நூலறிவுக்குக் கட்டுப்படாத புத்தர்; அறியாமை

அண்டாத முக்தர்; பிறர் உதவி வேண்டாத தன் இருக்கையைத் தானே கொண்ட ஸ்வபாவர் என்றெல்லாம் உரையாசிரியர்கள் போற்றுகின்றனர்.

பரமனின் பையத்துயின்ற நிலை, "மஹோதரிசயோ அந்தக" என 86ஆம் ஸ்லோகத்தில் 519ஆம் திருநாமமாகத் துதிக்கப்படுகிறது. உலகை ஒடுக்கி நீரில் கரைத்து எங்கும் காணப்பட்ட பெருங்கடலில் பழுத்த பரமன் முசுகுந்தச் சக்கிரவர்த்திக்கு கால் கட்டைவிரலைச் சப்பியவாறு ஆலினிலையனாக, பாலமுகுந்தனாகக் காட்சியளித்தாராம்.

'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்று தொடங்குகிறது மூன்றாவது பாவைப்பாடல். குறளன் வாமனனாகவும், ஓங்கி உயர்ந்த திருவிக்கிரமனாகவும், புருஷோத்தமனாகவும் துதிக்கிறது ஸஹஸ்ரநாமம்.

48. உபேந்த்ரோ வாமந: ப்ராம்சு

உபேந்திரன் என்ற சொல்லுக்கு இந்திரனின் துணைவன் என்பது பொருள்.

மஹாபலி செய்த வேள்வியின் பயனாக, இந்திரனாகிறான். பதவி இழந்த இந்திரனுக்காக தேவமாதா அதிதி திருமாலிடம் முறையிடுகிறாள். அவர் யாகப்பயனைப் போரிட்டுப் பறிக்க இயலா நிலையில், கசியபர் - அதிதி மகனாக, இந்திரன் தம்பியாகப் பிறந்து மூவுலகமும் யாசித்துப் பெற்றார்.

அதிதியின் பன்னிரண்டாம் மகனாகத் தோன்றிய குள்ள வடிவினரான வாமனர் மகாபலியின் செருக்கையடக்க மூவடி மண் வேண்டி திருவிக்கிரமனாகி ஓங்கி உலகளந்தார்.

'ப்ராம்சு' என்ற பெயருக்கே நெடியவர் என்பது பொருள். மூவுலகையும் ஈரடியால் அடக்கி, மாவலியின் தலைக்கனத்தை மூன்றாம் அடியால் அடக்கினார்.

உபேந்த்ர, வாமன, ப்ராம்சு என்ற மூன்றும் 151, 152, 153ஆம் திருநாமங்களாக ஸஹஸ்ர நாமத்தில் குறிப்பிடப்படுகின்றன.

மூவடியால் மூவுலகளந்த வரலாறு திருப்பாவையில் 'ஓங்கி உலகளந்த' என்றும், 'அம்பரம் ஊடு அறுத்து ஓங்கி' என்றும், 'அன்று இவ்வுலகு அளந்தாய்' என்றும் முறையே 3, 17, 24 பாசுரங்களில் மூன்று முறை பாடப்படுவது நயமான ஒப்புநோக்கு ஆகும்.

'உத்தமன்' என்ற கோதை வாக்கு 'புருஷோத்தமன்' என ஸஹஸ்ரநாமத்தில் 24ஆம் நாமமாக விரிகிறது.

34.........ஸ்ரீமான் கேசவ: புருஷோத்தம:

மன உறுதி, லட்சிய நோக்கு, செயல்திறன் உள்ளவர், விரும்பியதைச் சாதிக்கும் திறன் உள்ளவர் புருஷோத்தமர்.

நெல்... செந்நெல்... பெருஞ்செந்நெல்.. ஓங்கு பெருஞ்செந்நெல் என படிப்படியாக உயர்கிறது. இதன் உயர்வு உயரத்தில் இல்லை. சேற்றுள் அழுந்தி, நீருள் நனைந்து, வெயிலிற்காய்ந்து, அரிவாளால் அறுபட்டு, மாட்டுக்கால் மிதிபட்டு, அறைபட்டு, கொதிநீருள் வெந்து உணவாகி பசியாற்றி அழிந்து போகிறதே அதுதான் உயர்வு. அதைப்போலத்தான் உலகுக்குரியவன். வள்ளல் தன்னைத் தாழ்த்திக் கூனிக்குறுகி தேவர்க்காக யாசகம் கேட்கிறானே. தன்னை தன்பெருமையழித்துப் பிறர்க்கு உதவுகிறானே அவன்தான் உத்தமன். திருப்பாவை உத்தமன் அவன்தான்!

நான்காம் திருப்பாவையில் 'ஆழிமழைக்கண்ணா' என்றும் பதினோராம் பாடலில் 'முகில் வண்ணன்' என்றும் குறிக்கப்படும் நாமம் ஸஹஸ்ர நாமத்தில் 810-ஆம் நாமமாக "குமுத: குந்தர: குத்த: பர்ஜன்ய" என்று வருகிறது. 'பர்ஜன்ய' என்றால் குளிர்விக்கும் முகில் போன்றவர் என்பது பொருள். வானிருந்து மழையாக இறங்கிவந்து வாழ்விப்பவர் மழைக்கண்ணன். அவர் மழைக்கு அதிபதி.

'ஆழி மழைக்கண்ணா' பாடலில் தொடரும் திருநாமங்கள் 'ஊழி முதல்வன்' 'பத்மநாபன்' ஆகியவை ஏறத்தாழ ஒரு பொருள் குறிப்பன. 'பத்மநாப' என்னும் திருநாமம் 48, 196, 346ஆம் பெயர்களாக சஹஸ்ர நாமத்தில் வணங்கப்படுகின்றது.

37. அப்ரமேயோ ஹ்ருஷிகேச:
பத்மநாபோ ऽமரப் பிரபு
52. மரீசி................பத்மநாப: ப்ரகாபதி
69. பத்மநாபோ அரவிந்தாக்ஷ.......

உலகம் மூலப் பொருளாக விருத்த 'விராட்' நிலையில் இயக்க மிகுதியில் கூம்பிய தாமரை போல் காட்சியளித்தது. அதுவே பகவானின் தொப்புளிலிருந்து தோன்றியது. காலச்சுழற்சியால் விரிந்தது. அவன் தொப்புளும் தாமரை போன்று சிவந்து ஆழ்ந்துள்ளது. மலர்த் தாமரை நடுவில் மட்டுமின்றி மனத்தாமரை நடுவிலும் உள்ளவர் பதினோராம் வ்யூஹ மூர்த்தி! 'கொப்பூழில் எழுகமலப்பூவழகர்' அவர்.

கொப்பூழ் மலரில் நான்முகனை நாராயணன் படைத்து

உலகமுதல்வனாக, ஊழி முதல் வனாக ஆகிறார் அவர்.

திருப்பாவையின் ஐந்தாம் பாசுர ஆரம்பம் 'மாயனை' என்ற நாமம் இதுவே ஒன்ப தாம் பாசுரத்தில் 'மாமாயன்' என மலர்கிறது. மாயன் என்ற சொல் நேரடியாகப் பேரா யிரத்துதியில் இடம் பெறாவிடி னும் 'அத்புதன்' என்ற 126-ஆம் திருநாமம் மாயன், சொல்லுக் கெளிதாய் நின்றிடா விந்தை யன் என்று பொருள் கொள்ள இடமளிக்கிறது.

'ஆயர் குலத்தினில் தோன் றும் அணிவிளக்கு' என்ற தொட ரில் உள்ள 'விளக்கு', 21 ஆம் பாடல் "சுடரே" 125 'விஹா யஸ கதிர் ஜ்யோதி' என்ற ஸஹஸ்ரநாமத் தொடரில் உள்ள 'ஜ்யோதி'க்கு நிகரானவை. பிற ஒளிகளால் காணமுடியாத, தன் னைத் தானே விளக்கும் பேரொ ளியல்லவா அவன்? அதே பாடலில் சிகரமாய் அமையும் நாமம் "தாமோதரன்". உலகை வயிற்றுள் கொண்ட பெருமை யும், கயிற்றால் கட்டுண்ட எளி மையும் தோன்றும் திருநா மம். வ்யூஹ நாமத்தில் பன்னி ரண்டாவதாக இடம் பெறுவது இது. ஸஹஸ்ர நாமத்தில்,

71. விக்ஷரோ ரோஹிதோ மார்க்கோ
ஹேதுர் தாமோதரஸ்யஹ:

என்று போற்றப்படும் நாமம். எல்லாமடங்கிய வயிறே ஆயி னும் யசோதாவின் அன்புக்கா கக் கண்ணிநுண் சிறுத்தாம்பி னால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன் அவன்!

'புள்ளும் சிலம்பின' என்று துவங்கும் அடுத்த பாடலில் ஆண்டாள் இசைக்கும் நாமம் இரண்டு. 1. வெள்ளத்தில் துயில் அமர்ந்த வித்து. 2. 'ஹரி' என்ற பேரரவம்

77. விஸ்தார: ஸ்தாவர ஸ்தாணு:
ப்ரமாணம் பீஜம் அவ்யயம்

பகவான் எவ்வகையிலும் கேடுறாத விதையாயிருப்பவன் என்கிறது ஸஹஸ்ரநாம 429 ஆம் நாமம். 'ஆலமர் வித்தின் அருங்குறள் ஆனான்' என்பார் வாமனனைக் கம்பநாட்டாழ் வார்!

'ஹரி' என்ற நாமம் நீராடும் போது நினைவில் கொள்ளும் நாமம். கஜேந்திரனைக் காக்க வந்தவர் ஹரி. வேதங்களை ஓதுமுன்பும் முடிக்கும் போதும் உரைக்கும் நாமம். வேள் விப்பொருளை ஏற்கும் நாமம். வினைகளைக் களையும் நாமம் ஹரி. துயர் நீக்கும் துணை யான நாமம்.

நா.359, 650, 100... த்ரிலோகாத்மா
த்ரிலோகேசா கேசவ: கேசிஹா ஹரி:'
70 ஹவிர் ஹரி

என்கிறது ஸஹஸ்ரநாமம்.

'கீசு கீசென்று' எனத்தொடங் கும் அடுத்த பாவைப் பாசுரத் தில் பாவை ஆண்டாள் பாடும் திருநாமங்கள் 1. மூர்த்தி 2. கேசவன். இக்கேசவத் திருநா மம் நிறைவுப் பாடலிலும் இடம் பெறுகிறது.

திருப்பாவையில் மூர்த்தி நாராயண மூர்த்தியென இணை வது போல ஸஹஸ்ரநாம மூர்த்தியும்,

108. விச்வ மூர்த்திர் மஹாமூர்த்திர்
தீப்த மூர்த்திர மூர்த்திமான்
அநேக மூர்த்தி பவ்யக்தச் சதமூர்த்திச்
சதா நந:

என்றே வருகிறார்.

உலகையே உருவாகக் கொண்ட விச்வமூர்த்தி. 'பெரி யாய்' என கோதை விளிக்கும் பெருவடிவுடைய மஹாமூர்த்தி அநிருத்தர். 'சுடரே' என சுடர்க் கொடி போற்றும் ஒளிவடி வான தீப்தமூர்த்தி. உருவங்க ளில் அடங்காத அமூர்த்திமான். சகாதேவனுக்கும், கோபியர்க்கும் தோன்றியதுபோல எண்ணிலா உருவம் காட்டவல்ல அநேக மூர்த்தி! சதமூர்த்தி பலமுகம் கொண்ட சதாநந!

பன்னிரு திருநாமங்களில் சிறப்பானதும், வ்யூஹ நிலைக ளில் தலையான முதல் தோற் றம் கேசவன்தான்! நாராயண னின் வெண்முடி ஒன்று பல ராமனாகவும், கருமுடி ஒன்று கண்ணனாகவும் தோன்றியதா கக் கூறும் விஷ்ணு புராணம்.

கிலேசம் போக்கும் திருநா மம் கேசவன். ஒளிக்கதிரைக் கொண்டவர் கேசவன். கேச வன் என்ற நாமத்துக்கு அழ கிய, ஒளிகூடிய கேசங்களைக் கொண்டவர் என்பது பொருள். 'அழகியான் தானே அரி உரு வந்தானே' என்பது ஆழ்வார் வாக்கு. நரசிம்மர் வடிவில் பிடரி மயிர் பேரழகானதாம்.

க+அ+ஈச+வ: எனப் பிரித்து பிரும்மா, விஷ்ணு, சிவன் மூவுரு வையும் தன்னுருவில் கொண்ட வர் என்றும் பொருள் கொள் ளுவர். மூவுருவும் கண்ட போது ஒன்றும் சோதியல் லவா? அக்நி, சூரியன், வாயு என்ற மூன்று சக்திகளைக் கொண்ட திருநாமம் கேசவன். 'கேசி' என்ற அசுரனை மாய்த்த தாலும் கேசவநாமம் அவர்க்குப் பொருந்தும். 'மாவாய்ப் பிளந் தான்' என்பாள் கோதை.

'கீழ்வானம்' எனத் தொடங் கும் திருப்பாவைப் பாசுரத் தில் வரும் 'மாவாய் பிளந் தான்' கேசவன் என்ற திருநா மத்துள் அடங்கும். மல்லரை மாட்டிய விருத்தாந்தம் ஸஹஸ்

ரநாமம் 825ஆம் திருநாமத்தில் பேசப்படுகிறது. அந்திரநாட்டு மல்லன் சாணுரனை அழித் ததை நினைவு கூர்கிறது.

119...... அச்வத்த சாணுராந்த்ர
நிஷூதந

இதே பாடலில் உள்ள இன் னொரு நாமம் தேவாதி தேவன். இதே நாமம் 17ஆம் பாசுத்தி லும் 'உம்பர் கோமானே' என விளிக்கப்படுகிறது.

உலகம் இயங்க தேவதை களை உருவாக்கிய பரமன் அம ரப் பிரபு (நா. 49) எனவும், படைப்பு முதலான அலகிலா விளையாட்டுடையார், தேவர் பகைவரைத் தேய்ப்பவர் என்ற கருத்தில் 'தேவ' (நா. 375) என் றும், அசுர நகரங்களை அழிப் பதாலும் ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களாகிய புரத்தை அழிப்பதாலும் புரந்தர (நா. 335) என்றும் ஸஹஸ்ரநாமம் தேவாதி தேவனை ஏத்துகிறது. மேலும் 83ஆம் ஸ்லோகத்தில்,

ஆதிதேவோ மஹாதேவோ
தேவே தேவப்ருத்குரு:

என்றும் தேவதேவன் வணங்கப் படுகிறுர்.

மஹாதேவர் பெருந்தேவர். தேவேச என்பது தேவர்களின் ஈஸ்வரன். நா. 492 தேவ ப்ருத்குரு: என்பது தேவர்க ளைக் காக்கும் தேவேந்திரனுக் கும் ஈஸ்வரன் என்ற பொருள் படும். நா. 493 பட் டர் வாக்குப்படி, தேவர்கட்குத் தம் விருப்பம்போல் பொறுப்புக் களைப் பகிர்ந்தளித்துத் தாங்கி வேதம் மூலம் பொறுப்புக்களை உணர்த்துகிறுராம்.

ஒன்பதாவது திருப்பாவை யில்தான் 'மாமாயன், மாதவன், வைகுந்தன் என்றென்று நாமம் பலவும்' நவில்கின்ருள் கோதை நாச்சியார்.

'மாதவன்' என்ற திருநா மம் கடைசிச் சாற்றுப்பாட்டி லும் துதிக்கப்படுகிறது. பன் னிரு திருநாமங்களில் மூன்ரு வதாகும் இது.

39 ......ஹிரண்ய கர்ப்போ பூகர்ப்போ
மாதவோ மதுஸூதந: (நா. 72)
49....வேத்யோ வைத்யஸ் ஸதாயோகீ
வீரஹா மாதவோ மது: (நா. 167)
109......லோக பந்துர் லோகநாதோ
மாதவோ பக்தவத்ஸல: (நா. 735)

'மாதவ' என்ற நாமம் 'திருமாம கள் கேள்வன்', உலகை அடக்கி, அளவிட்டுப் பகிர்ந்தளிக்கும் இலட்சுமியின் நாதன் என்ற பொருளிலும், மௌனம் தியா னம், யோகம் என்ற மூன் ருல் உணரப்பெறும் பரம்பொ ருளைப்பற்றி அறிய உதவும் பிரும்ம வித்யைக்கு நாயகர் என்ற பொருளிலும், யது வம் சக் கிளையான மதுக்குலத்தில் தோன்றியவர் என்ற பொருளி லும் எடுத்தாளப்படுகிறது.

75. 'வைகுண்ட்ட: புருஷ' என்று தொடங்கும் ஸ்லோகத் தில் வரும் 405ஆம் நாமம் தடுத் தாட்கொள்பவர். பஞ்சபூதங் கள் தம் போக்கில் செல்லாது, பொருத்தமாக நீரை நிலத் துடனும், காற்றைக் கனலுட னும், வானுடனும் இணைத்து இயங்கச் செய்பவர், சுப்ரர் - விகுண்டா தம்பதியர்க்கு மகளான ரமாவை மணந்து அவள் விருப்பப்படி படைத்த வைகுண்ட உலகாயிருப்பவர் என்று பலபொருள் சுட்டுவது அந்நாமம்.

சிவபெருமான் பார்வதிக்கு ஸ்ரீராம என்ற ஒரு நாமமே ஸஹஸ்ர நாமங்கட்கும் ஸமம் என்று அறிவுறுத்தினார்.

ஈச்வர உவாச -

ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே
மனோரமே
ஸஹஸ்ர நாம தத்துல்யம் ராமநாம
வராநநே
ராம நாம வராநநே ஓம் நம: இதி:

74. ராமோ விராமோ விரதோ...
(நா. 394)

மனம் வேறிடம் நாடாது தன் னிடமே லயிக்கச் செய்து இன்பு றச் செய்பவன் என்ற பொருளில் 'ராம' என தசரத குமாரன் பெய ரிடப்பட்டான். இதனையே ஆண்டாள் 'மனதுக்கினியான் என அழகுறத் தமிழ்ப்படுத்தி யுள்ளாள். தன்னைச் சார்ந் தார் மனதுக்கன்றியே மாற்ருர் களான மாரிசன், வாலி, இராவ ணன் முதலியோர் மனதுக்கும் இனியான் ஆனான் இராமன்.

திருமாலின் பஞ்சாயுதங்களில் 'சார்ங்கம் எனும் வில்லாண் டான்' (திரு.4) 'சங்கொடு ச கரம் ஏந்தும் தடக்கையன்' என மூன்று ஆயுதங்களை முன் வைக்கிருள் கோதை. (திரு. 14

138. சங்கப் ப்ருந்நந்தகீ சக்ரீ
சார்ங்க தந்வா கதாதர

சங்க நாத முழக்கமே பகை வரை கதிகலங்கச் செய்வதால் சங்கும் ஒரு படையாயிற்று. (நா 993) மனஸ் தத்துவத்தையே சக் கிரமாக ஏந்தியவர் சக்ரீ. (நா 995) 'சக்ர கதாதர' (நா. 546) என வும் இன்னோரிடத்தில் ஸஹஸ் ரநாமம் போற்றுகிறது. இந்தி ரியங்களின் மூல தத்துவமான ராகஸ அஹங்கார தத்துவமே வில்லானது என்கிறது விஷ்ணு புராணம். 'சார்ங்க தந்வா (நா. 996) என்ற நாமம் சார்ங் கம் எனும் வில்லாண்டான் என திருப்பாவையில் எதிரொலிக்கி றது.

கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து
செவ்வரியோடி
பெரிய வாய கண்கள் என்னைப்
பேதைமை செய்தனவே'

எனக் கண்ணழகில் நெஞ்சிழந் தார் திருப்பாணுழ்வார்.

செவ்வரியோடிய கண்ணன் பாவை வாக்கில் 'பங்கயக் கண்ணன்' ஆகிறான். இத்தொடர் குளிர்ச்சி, அழகு, ஈர்ப்பு, பரிவு, நெகிழ்ச்சி ஆகிய பண்புகளை வெளிக்கொணரும் ஆற்றல் பெற்றது. ஸஹஸ்ரநாமம் இதை 69. 'பத்மநாபோ அரவிந்தாக்ஷ......' என்று வியக்கிறது. (நா. 347, 40, 45, 111, 556) 'புஷ்கராக்ஷ' 'புண்டரிகாக்ஷ' என்றெல்லாம் கண்ணழகைக் காட்டுகிறது.

பல்லாண்டு பாடிய பெரியாழ்வார் மகள் ஆண்டாள் தந்தை அடியொற்றிப் போற்றி பாடுவது இயல்பே.

" 'குன்று குடையாய் எடுத்தாய்'
குணம் போற்றி!"

என்கிறாள் அவள். ஸஹஸ்ரநாமமும் இதை

50......ஸ்ரீமாநமே யாத்மா
மஹாத்ரித்ருக் (நா. 180)

'பெருமலையைத் தாங்கக் கூடியவர்' என்ற நாமத்தை, விரல்கூட மாற்றாமல் கோவர்த்தனகிரியை விரலெடுத்து ஏந்திய விருத்தாந்தம் விளக்கும்.

நாமங்களிலேயே நாயகன் விரும்பிய திருநாமம் 'கோவிந்தா' என்பதாகும். இந்நாமத்துக்கு முன் மற்ற நாமங்கள் எல்லாம் சிறுபேராம். 'குறைவொன்றுமில்லாத கோவிந்தா' என்று குரல் கொடுக்கிறாள் கோதை. அவள் வேண்டும் பறை கொட்டும் சிறு பறை அல்ல என்பதையும் 'இற்றைப் பறை கொள்வான் அன்று காண் கோவிந்தா' என்று கோவிந்தனிடந்தான் கூறுகிறாள்.

45. வேதோ வேதவி நவ்யங்கோ...
(நா. 129)

'அவ்யங்கோ' என்ற நாமம் குறைபடாதவன் என்று குறிக்கிறது. ஞானம், சக்தி, செல்வம், பலம், வீர்யம், தேஜஸ் என்ற ஆறு குணங்களும் குறைவற உள்ளவன். குறையற்ற வேத வடிவினன், குறைவின்றி ஆறு சக்திகளும் உடையவன் என்பதை விளக்குகிறது. கோதை குறிப்பிடும் கோவிந்தன் பசுநேசன் 'கோபதி' என்ற நாமத்தால் முழுமையாக ஸஹஸ்ரநாமத்தில் பெறப்படுகிறது.

84. உத்தரோ கோபதிர்........
(நா. 495)

கோகுலம், பிருந்தாவனம் முதலிய இடங்களில் பசுக்களைக் காத்தவன். குன்றெடுத்து மழையிலிருந்து பசுக்களையும், கோபர்களையும் காத்தவன். இடக்கை, வலக்கை அறியா ஆயர்களின் தோழன் அவன். கோ எனும் பூமி ரட்சகன். கோ என்பது வாக்கையும் குறிக்கும். கொடுத்த வாக்கைக் காப்பவன் கண்ணன். சகதேவனுக்குக் கொடுத்த வாக்கைக் காத்தவனல்லவா கண்ணன்? கோவிந்தன் பசுக்களுக்கு இதமானவனாம்.

94. கோஹிதோ கோபதிர் கோப்தா
(நா. 591)

என்கிறது ஸஹஸ்ர நாமம்.

ஆண்டாள் பயன்படுத்தும் 'கோவிந்தா' என்ற நாமமும் ஸஹஸ்ரநாமத்தில் உண்டு.

51....... அநிருத்தஸ் ஸுரா
நந்தோ கோவிந்தா கோவிதாம் பதி
(நா. 187)

கூப்பிடுதூரத்தில் இருப்பவன் கோவிந்தன். பாஞ்சாலி கூப்பிட்டவுடன் வந்தவன் அவன் தானே? பூமியை மீட்ட வராஹரையும் இந்நாமம் குறிக்கவல்லது.

89. மஹா வராஹோ கோவிந்த:
(நா. 539)

வேத உபநிடதங்களால் அடையத்தக்கவர் கோவிந்தன்.

கோதையின் உவமை சில கூட ஸஹஸ்ர நாமத்தில் இடம் பெறுகிறது. அங்கண் இரண்டையும் திங்களும் ஆதித்யனும் என கோதை உவமிப்பாள் (திரு. 22) இதை ஸஹஸ்ரநாமம் (25) 'சந்த்ர ஸூர்யெள ச நேத்ரே' எனக் குறிப்பிடுகிறது.

'யமுனைத் துறைவன்' என்ற கோதை பாடும் திருநாமம் ஸஹஸ்ரநாமத்தில் நேரடியாக இடம் பெறாவிடினும், 'யமுனா வாசிகளுடன் கூடியவர்' என்ற பொருளில் "ஸுயாமுந:" (நா. 707) எனக் குறிப்பிடப்படுகிறார்.

கம்ஸன் போன்றவர்களால் எமுனை மாசுபட்டாலும், கண்ணன், கோபியர்களால் தூய்மைபெற்று ஸுயமுநா ஆகிறது.

ஸஹஸ்ரநாமப் பெருங்கடலைகள் ஒதுக்கிய முத்துக்கள் சில கோதை தன் சங்கத் தமிழ் மாலையில் கோத்து சுடர்விடச் செய்துள்ளாள். முத்தின் ஒளி மாலையில் பிரகாசிப்பதைக் காணும் பேறு பெற்றவர்கள் பேராயிரத்தான் பரிவுக்கும், பாவை கனிவுக்கும் பாத்திரர்னி ஆவோமல்லவா?

குறிப்பு: கட்டுரையில் ஸஹஸ்ர நாம ஸ்லோக எண். நாம எண் சி.வெ. ராதா கிருஷ்ண சாஸ்திரியின் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திர தமிழ் உரையின்படி கொடுக்கப்பட்டுள்ளன.





# ஸ்ரீவேங்கடேச மங்களம்



ஸ்ரீமான் உ.வே. தி.அ. க்ருஷ்ணமாசாரியர் - திருப்பதி

கீழே ஸ்தோத்ரத்தில் 'நித்யஸேவாபலம் ப்ரயச்ச' (10) என்று ப்ரார்த்தித்த பலத்திற்கு உபாயமாகத் திருவேங்கடமுடையான் திருவடிகளை ப்ரபத்தி என்ற ஸ்தோத்ரத்தின் மூலமாகப் பற்றி, அதன் இறுதியில் முன்பு ப்ரார்த்தித்த நித்யஸேவையாகிற நித்ய கைங்கர்யத்தையே 'துப்யம் ஸ்யாம் கிங்கரோ வ்ருஷகிரீச' என்று மறுபடியும் ப்ரார்த்தித்தார். அத்தகைய கைங்கர்யத்தில் வாசிக கைங்கர்யமும் ஒன்றாகையால் வாசிகமான மங்களாசாஸனத்தை இந்நூலில் செய்தருளுகிறார்.

மங்களஸ்ய ஆசாஸனம் - மங்களாசாஸநம். எம்பெருமானுக்கு மங்களத்தை - நன்மையை, வேண்டுதலே மங்களாசாஸனமாகும். இது ஒருவிதமான ஆசீர்வாதத்தில் முடியும்.

உலகில் ரக்ஷகனான - காப்பாற்றுமவனான பெரியவன், ரக்ஷ்யனுக்கு - தன்னால் காப்பாற்றப்படுமவனுக்கு நன்மைகள் உண்டாகவேண்டுமென்று ஆசீர்வதித்தல் யுக்தமாகும். ஸர்வரக்ஷகனென்று பேர்படைத்துள்ள பெருமானுக்கு ரக்ஷ்யரான நாம் நன்மைகளை, வேண்டுவது நமது நிலைக்கு மாறுபட்டதாக ஆகாதா என்று இங்கு ஒரு கேள்வி எழுவது இயல்பே. அதற்கு ஸ்ரீவசன பூஷணமென்னும் திவ்ய சாஸ்த்ரத்தில் பிள்ளை லோகாசார்யர் அருளும் விடையைக் காண்போம்.

நமக்கு உடலென்றும் ஆத்மாவென்றும் இரண்டு பொருள்கள் இருப்பதுபோல, எம்பெருமானுக்கும் திருமேனி என்றும் திவ்யாத்மா என்றும் இரண்டு பொருள்கள் உள்ளன. திருமேனியில் மென்மைத்தன்மை அழகு முதலிய குணங்களும் திவ்யாத்மஸ்வரூபத்தில் பேரறிவு பேராற்றல் முதலிய குணங்களும் பொருந்தியுள்ளன. திருமேனியைக் காணுமல் அவனது ஸ்வரூபமும் அதன் குணங்களும் அறியப்படும் நிலை ஒன்றுள்ளது. அதற்கு ஜ்ஞாநதசையென்று பெயர். அப்போது அவனுடைய பேரறிவு பேராற்றல் முதலான குணங்கள் நினைவிலுள்ளபடியால் அவனை ரக்ஷகனாகவும் நம்மை ரக்ஷ்யராகவும் கருதி அவனிடம் வரம்வேண்டி நம்மை நாம் காப்பாற்றிக் கொள்ளுகிறோம். இந்நிலையில் ரக்ஷ்யத்வம் நம்மிடமும் ரக்ஷகத்வம் பெருமானிடமுமாக முறைப்படி இருக்கும். பெருமானது திருமேனியைக் கண்டபோதோவெனின் அதன் கண், நாம் தொட்டாலேயன்றிப் பார்த்தாலும் வாடுமோவென்னும்படியான மென்மைத்தனம் அழகு முதலிய குணங்கள் இருப்பதைக் கண்டு அவற்றில் கண்களையும் மனத்தையும் பறிகொடுத்து மயங்கிய நமக்கு அவற்றில் ஆசை அதிகமாக உண்டாகின்றது. இந்நிலைக்கு ப்ரேமதசையென்று பெயர். இப்போது அவனுடைய அறிவு ஆற்றல் ஆகியவற்றை மறந்துபோய், இத்தனை மெத்தென்றிருக்கும் இவ்வழகிய திருமேனிக்கு என்ன தீங்கு நேரிடுமோ என்றஞ்சி அவனைக் காக்க நினைத்து 'நீ நீடுழி வாழவேணும், உனக்கு எல்லா மங்களமும் உண்டாகவேணும்' என்று அவனை வாழ்த்துகிறோம். ஆகையால் இந்த ப்ரேம நிலையில் முன்பு போலல்லாமல் ரக்ஷ்யத்வம் அவனிடத்திலும் ரக்ஷகத்வம் நம்மிடத்திலுமாக மாறுடியிருக்கும். ஆதலால் மங்களாசாஸநம் ஸ்வரூபத்திற்கு முரணானதன்று - என்பது லோகாசாரியர் அருளியுள்ள விடை.

ஆக எம்பெருமான் நம்மைத் தன் திருமேனியழகைக் காட்டி மயக்கி, தான் ரக்ஷகனென்பதை மறப்பித்து, தான் நமக்கு ரக்ஷ்யனென்பதைத் தெரிவித்துத் தன்னை வாழ்த்தும்படி செய்கிறானாகையால் சிறியோராகிய நாமும் பெரியோனாகிய அவனை மங்களாசாஸனம் செய்வது உசிதமேயாகுமென்று விடையளிக்கப்பட்டதாயிற்று.

இங்ஙனம் ப்ரேமதசையில் அவனழகுக்கும் ஸௌகுமார்யத்திற்கும் தோற்று அவனைப் பல்லாண்டென்று போற்றிய பெரியாழ்வாரைப் போல் இந்நூலாசிரியரான அண்ணவும் திருவேங்கடமுடையானுக்கு மங்களாசாஸனம் செய்தருளுகிறார் - ஸ்ரீவேங்கடேச மங்களம் என்னும் இந்நூலில்.

ச்ரிய: காந்தாய கல்யாணநிதயே
நிதயேऽர்த்திநாம் ।
ஸ்ரீவேங்கடநிவாஸாய ஸ்ரீநிவாஸாய
மங்களம் ॥ (1)

(ப.) ச்ரிய: காந்தாய = திருமகளின் மணவாளனும், கல்யாண நிதயே = மங்களங்கள் தங்குமிடமும், அர்த்திநாம் நிதயே = யாசிப்பவர்க்குப் புதையலும், ஸ்ரீவேங்கட நிவா

ஸாய = திருவேங்கட மலையை இருப்பிடமாக உடையவனுமாகிய, ஸ்ரீநிவாஸாய = ஸ்ரீநிவாஸனுக்கு, மங்களம் அஸ்து = மங்களம் உண்டாகுக.

(க) தேவியான திருமகள் திருமார்பில் எப்போதும் தங்கியிருப்பதனால், வேண்டுவார் வேண்டியவற்றை எவ்வளவு கொடுத்தாலும் குறையாத நிதியாய், திருவேங்கடமலையில் வாழ்பவனாய், ஏற்கனவே மங்களங்களெல்லாம் தங்கப்பெற்றவனாய் இருக்கிற பெருமானுக்கு மேன்மேலும் மங்களங்கள் உண்டாக வேணும்.

(வி) ச்ரயதே இதி ஸ்ரீ: என்ற வ்யுத்பத்தியின்படி - எம்பெருமானை ஆச்ரயித்திருப்பதனால் ஸ்ரீ: என்பது பெரியபிராட்டியார்க்குத் திருநாமம். காம்யதே (ஸ்ம) இதி காந்த: - என்னும் வ்யுத்பத்தியின்படி காந்த சப்தம் மனைவியினால் விரும்பப்பட்ட மணவாளனுக்கு வாசகம். ஆக ச்ரிய: காந்த: என்பது பிராட்டியின் ஆசைக்கு இலக்கான பெருமாளைக் கூறிற்றுகிறது.

கல்யாணநிதயே - கல்யம் அணயதி இதி கல்யாணம். ஸுகத்தை அடைவிப்பது என்றபடி. நிதி: - இருப்பிடம். இத்தொடரால் ஸம்ஸாரிகளுக்கு ஸுகத்தைத் தருமவையான பூமாலை சந்தனம் தாம்பூலம் வஸ்த்ரம் ஆபரணம் குங்குமம் சீப்பு கண்ணாடி ஸ்த்ரீகள் படுக்கை மாளிகை தோட்டம் மண்டபம் நடைவாவி முதலிய கல்யாணப் பொருள்களுக்கும், முமுக்ஷுக்கள் முதலியோர்க்கு இன்பமூட்டுவையான ஜ்ஞாநம் சக்தி வாத்ஸல்யம் ஸௌந்தர்யம் லாவண்யம் முதலிய நற்குணங்கள் திருவிளையாடல்கள் சுபாச்ரயமான திருமேனி தொடக்கமான கல்யாணங்களுக்கும் நிதி - புதையல் போல் இருப்பிடமாயிருப்பவன் எம்பெருமானென்று காட்டினபடி.

அதற்கு ப்ரயோஜநம் சொல்லுகிறது - அர்த்திநாம் நிதயே என்று. அதாவது முற்கூறிய கல்யாணங்களை அநுபவிக்கவேண்டித் தன்னை யாசிக்கும் ஸம்ஸாரிகள் முமுக்ஷுக்கள் போன்ற அதிகாரிகளுக்கு அவற்றை எவ்வளவு வழங்கினாலும் அந்த மங்களங்கள் தன்னிடம் சிறிதும் குறையாத நிதிபோன்றவனென்றபடி.

ஸ்ரீவேங்கடநிவாஸாய - யாசிப்பவர்களுக்கு மங்களங்களைக் கொடுப்பதற்காகத் திருவேங்கடமலையைவிட்டுப் பேராமல் நிற்கிறானென்கிறது. ஸ்ரீநிவாஸாய - ஸ்ரீ: நிவஸதி அஸ்மிந் இதி ஸ்ரீநிவாஸ: என்ற வ்யுத்பத்தியின்படி பிராட்டி நித்யவாஸம் செய்யுமிடமானவன் என்று பொருள்படும் இச்சொல் திருவேங்கடவனுக்குக் காரணப்பெயர்.

ஆக - திருமகள் விரும்பும் மணவாளனாய் அவள் ஸம்பந்தத்தால் தனக்குச் செழித்த கல்யாணங்களை வேண்டுவோர்க்கு வேண்டியபடியே வழங்கிக்கொண்டு வேங்கடத்துறையும் ஸ்ரீநிவாஸனுக்கு அக் கல்யாணங்கள் (மங்களங்கள்) மேன்மேலுமுண்டாகவேணுமென்று இதனால் வாழ்த்தினாரென்க.

**லக்ஷ்மீஸவிப்ரமாலோக ஸுப்ரூ-**
**விப்ரம சக்ஷுஷே ।**
**சக்ஷுஷே ஸர்வலோகாநாம்**
**வேங்கடேசாய மங்களம் ॥ (2)**

(ப.) லக்ஷ்மீ ஸவிப்ரம ஆலோக = லக்ஷ்மீதேவியின் விலாஸத்துடன் கூடிய பார்வைக்கிலக்கான, ஸுப்ரூ விப்ரமசக்ஷுஷே = அழகிய புருவநெறிப்பும் திருக்கண்களும் உடையவனும், ஸர்வ லோகாநாம் = எல்லா வுலகங்களுக்கும், சக்ஷுஷே= கண்போன்றவனுமாகிய, வேங்கடேசாய = திருவேங்கடநாதனுக்கு, மங்களம் அஸ்து = மங்களம் உண்டாகுக.

(க.) மங்களதேவதையான மகாலக்ஷ்மி மையல் கொண்டு பார்க்கும்படி அழகிய புருவநெறிப்பும் திருக்கண்களும் உடையவனாய், உலகம் அனைத்துக்கும் மங்களம் உண்டாகுமாறு குளிர நோக்கும் திருவேங்கடநாதனுக்கு மேன்மேலும் மங்களம் உண்டாகவேணும்.

(வி) லக்ஷ்ம்யா: ஸவிப்ரமாலோகா: (ஸ்வஸ்ய) ஸுப்ரூ விப்ரமே சக்ஷுஷி ச யஸ்ய ஸ: - லக்ஷ்மீ.......... விப்ரம சக்ஷு: என்று விக்ரஹித்தால் - லக்ஷ்மீதேவியின் விலாஸத்துடன் கூடிய பார்வைகள் தனது அழகிய புருவநெறிப்பிலும் கண்ணிலும் விழப்பெற்றவன் பெருமான் என்ற பொருள் தோன்றும். பெருமானுடைய அழகிய புருவநெறிப்பையும் கண்களையும் பிராட்டி தன் கடைக்கண்ணால் நோக்குகிறாளென்றபடி. எம்பெருமான் தனக்குப் பரப்ரஹ்மத்வம் ஸித்திப்பதற்காகப் பிராட்டியிடம் தன் புருவநெறித்தல் அழகிய திருக்கண்பார்வை இவற்றால் அதை யாசிக்க, பிராட்டியும் தனது கடைக்கண் பார்வையாலே அவற்றைக் கண்டு தன்னிசைவை அறிவித்து பரப்ரஹ்மத்வத்தை அவனுக்கு வரமாகத் தந்தாளென்னும் இன்

சுவைப் பொருள் இதனால் தேறும். 'அபாங்கா: பூயாம்ஸ: யதுபரி - பரம்ப்ரஹ்ம தத் அபூத்' (ஸ்ரீகுண30) ஸ்ரீதேவியே உனது அதிகமான கடைக்கண் பார்வைகள் எந்த வ்யக்தியின் மீது விழுந்தனவோ அது பரப் ரஹ்மமாக ஆயிற்று - என்று பரமரஸிகரான பட்டர் அருளி யது காணத்தகும்.

இனி லக்ஷ்மீஸவிப்ரமாலோகேக்ஷு (ஸ்வஸ்ய) ஸுப்ருவிப்ரம: சக்ஷு: ச யஸ்யஸ: என்று விக்ரஹம் கொண்டால் - பெருமான் தன்னுடைய அழகிய புருவநெறிப்பையும் கண்களையும் பிராட்டியின் அழகிய பார்வைகளில் செலுத்துகிறானென்ற பொருள் தோன்றும். இதற்குப் பயன் தன் கருத்தை அவளுக்குப் புலப்படுத்தலாகும். அதாவது பிராட்டியின் கண்களில் தன் புருவ நெறிப்புடன் கூடிய பார்வையைத் தூதாக விட்டு அதன் மூலமாகத் தனது ஆசையை அறிவிக்கிறானென்றபடி. 'இளவாய்ச்சியர் கண்ணினுள் விடவே செய்து (தன் பார்வையைத் தூதாக விடுவதைச் செய்து) விழிக்கும் பிரானையே' (திருவாய் 1-7-5) என்றும், தூதுசெய் கண்கள் கொண்டு ஒன்று பேசி' (திருவாய் 9-9-9) என்றும் ஆழ்வார் அருளிச்செய்தவை இதற்கு ஒரு வகையில் சான்றாகக் கொள்ளத்தகும்.

ஸர்வலோகாநாம் சக்ஷு:- நல்லறிவையுண்டாக்கிக் காக்கும் கண்போல, திருவேங்கடவனும் 'அடிக்கீழமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின்' (திருவாய் 6-10-11) என்று குறிப்பிட்டு வாழ்வுக்குத் தன் திருவடிகளே உபாயமென்ற நல்லறிவையுண்டாக்கி அதன் பயனாகத் தன் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றினவர்களை வாழ்வளித்துக் காப்பாற்றுகிறானென்றபடி. 'சக்ஷுர் தேவாநாம் உத =ச' மர்த்யாநாம் (காடகம் 4- 6) தேவர்க்கும் மனிதர்க்கும் கண்ணானவன் என்ற ச்ருதியும், 'கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்குத் தண்ணார் வேங்கட விண்ணோர்வெற்பனே' (திருவாய் 1-8-3) என்று அதனைத் தமிழாகச் செய்த மாறன் திருவாக்கும் இதற்குப் பிரமாணங்களாகும்.

ஸ்ரீவேங்கடாத்ரிச்ருங்காக்ர மங்களா
பரணாங்க்ரயே ।
மங்களாநாம் நிவாஸாய
ஸ்ரீநிவாஸாய மங்களம் ।। (3)

(ப.) ஸ்ரீவேங்கடாத்ரி= திருவேங்கடமலையின், ச்ருங்க அக்ர = கொடுமுடியின் உச்சிக்கு, மங்களா ஆபரண அங்க்ரயே = சுபந்தரும் ஆபரணமான திருவடிகளை உடையவனும், மங்களாநாம் நிவாஸாய ஸ்ரீநிவாஸாய = மங்கள(கரமான குண)ங்கள் (முதலியவற்றிற்குத்) தங்குமிடமான ஸ்ரீநிவாஸனுக்கு, மங்களம் அஸ்து = மங்களம் உண்டாகுக.

(க.) திருவேங்கடமலைச்சிகரம் ஆபரணம் பூண்டதோ என்னும்படி அமைந்த திருவடிகளும் மங்களமான குணங்களும் சரிதங்களும் திருமேனியும் திருவாபரணங்களும் பிறவும் உடைய ஸ்ரீநிவாஸனுக்கு மங்களம் உண்டாகவேணும்.

(வி) இதன் முன்னடிகளால் ஸ்ரீவேங்கடாத்ரி சிகராபரணயமானௌ.. ஸ்ரீவேங்கடேச சரணௌ' (ப்ரபத்தி13) என்று முன்பு அருளியதையே அனுவதித்தார். 'மங்களாநாம் நிவாஸாய' என்றதனால் 'கல்யாணநிதயே' (ஸ்ரீவே-மங்1) என்றதனை அனுவதித்தார். முக்கியமானதும் ரஸவத்தரமுமான அர்த்தத்தை அடிக்கடி ப்ரஸ்தாவிப்பது, கூறியது கூறல் என்னும் குற்றத்தின் பாற்படாதன்றோ?

மங்கம்வாதி இதி மங்கலம் என்ற வ்யுபத்தியின்படி ஸுகத்தைத் தருமது என்னும் பொருள்படும் மங்கல சப்தம் முற்கூறிய கல்யாண சப்தத்தின் பரர்யாயமாகும். 'ச்வச்ரேயஸம் சிவம் பத்ரம் கல்யாணம் மங்கலம் சுபம்' என்ற அமரகோசம் காண்க.

ஸர்வாவயவ ஸௌந்தர்யஸம்பதா
ஸர்வ சேதஸாம் ।
ஸதா ஸம்மோஹநாயாஸ்து
வேங்கடேசாய மங்களம் ।। (4)

(ப.) ஸர்வ அவயவ = எல்லா அவயவங்களுடைய, ஸௌந்தர்ய ஸம்பதா = அழகின் நிறைவினால், ஸர்வ சேதஸாம் = அனைவரின் மனங்களுக்கும், ஸதா= எப்போதும், ஸம்மோஹநாய = மோஹமுண்டாக்குகின்ற, வேங்கடேசாய = திருவேங்கடநாதனுக்கு, மங்களம் அஸ்து = மங்களம் உண்டாகுக.

(க.) திருவடிமுதல் திருமுடிவரையில் உள்ள அவயவங்களில் அழகு மிக்கிருப்பதால், 'தோள்கண்டார் தோளே கண்டார்' என்றபடி ஒவ்வொன்றையே மோஹித்துப் பார்க்கும்படி அனைவர்க்கும் மையலூட்டுகிற பெருமானுக்கு மங்களம் உண்டாகவேணும்.

(வி) உடல் முழுதும் பரவிய ஸமுதாய சோபை என்னும் அழகு லாவண்யமென்று பெயர் பெறும். ஒவ்வோரு றுப்புக்களும் ஸாமுத்ரிக லக்ஷணங்களோடு கூடி அமைந்திருக்கும் அழகு ஸௌந்தர்யமெ

னப்படும். இத்தகைய அவயவ சோபையைக் காட்டி எல்லோர்க்கும் ப்ரீதியைத் தன்னிடமுண்டாக்குகிறான் பெருமான் - இப்படிச் செய்தால் அவர்கள் தன்னடியார்களாகித் தொண்டு செய்வார்களென்று கருதி என்க. ப்ரீதிகாரிதமன்றோ கைங்கர்யம்.

**நித்யாய நிரவத்யாய**
**ஸத்யானந்தசிதாத்மநே ।**
**ஸர்வாந்தராத்மநே ஸ்ரீமத்வேங்கடேசாய மங்களம் ।। (5)**

(ப.) நித்யாய = அழிவில்லாதவனும், நிரவத்யாய = குற்றமில்லாதவனும், ஸத்ய அநந்த சித் ஆத்மநே = மாறுதலில்லாத- எல்லையில்லாத - ஞானரூபமான தன் சொரூபத்தை உடையவனும், ஸர்வ அந்த: ஆத்மநே= எல்லார்க்கும் உள்ளே ஆத்மாவாக இருப்பவனுமாகிய, ஸ்ரீமத் வேங்கடேசாய = திருவேங்கடநாதனுக்கு மங்களம் அஸ்து = மங்களம் உண்டாகுக.

(க.) எல்லாவுடல்களிலும் உயிர்கள் இருப்பதுபோல் அவ்வுயிர்களுக்குள்ளும் தான் உயிராய் இருந்து அவற்றின் குற்றம் சிறிதும் தன்னை அணுகாமல், என்றும் ஒரு தன்மையாய் எல்லை காணமுடியாத ஞானத்தைத் தனக்கு வடிவாகப் பெற்று நித்யமாக விளங்கும் திருவேங்கடநாதனுக்கு மங்களம் உண்டாகவேணும்.

(வி) நித்யன்= அழிவில்லாதவன். 'என்றும் இறவாத எந்தை' (மூன்றாந்திரு17) என்றாரிறே பேயாழ்வார். நிரவத்யன் = 'அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விசோக: விஜிகத்ஸ: அபிபாஸ:' (ச்சாந்தோக் 8-7-1) புண்யபாபமற்றவன் மூப்பு மரணம் துக்கம் பசி தாகம் இவையில்லாதவன் என்று வேதமோதியபடிப் புண்யபாபாதி தோஷமேதுமில்லாதவனென்றபடி. ஸத்யாநந்த சிதாத்மா = 'ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்ரஹ்ம' (தைதீரியோப= ஆனந்தவல்லி1) என்கிறபடியே ஸத்யத்வம் ஜ்ஞாநத்வம் அநந்தத்வம் ஆகியவற்றை ஸ்வரூபமாக உடையவன். ஜடப்பொருள்களுக்குப் போல் உருவமாறுபாடும், ஆத்மாக்களுக்குப்போல் ஞானமாகிய தன்மை சுருங்குதலும் . பெருகுதலுமாகிய மாறுபாடுமில்லாமை ஸத்யத்வமாகும். ஜ்ஞாநத்வமாவது - எப்போதும் சுருங்காமல் பரவியேயிருக்கும் ஜ்ஞாநத்தையே வடிவாகவுடைமை. இந்த உபநிஷத்தில் ஞானமென்றதை இவர் இதில் சித் என்று குறித்துள்ளார். இனி அநந்தத்வமாவது - தேசவளவு காலவளவு பொருளளவு ஆகிய அந்தமில்லாமலிருக்கை. அதாவது எல்லாவிடத்திலும் எல்லாக் காலத்திலும் எல்லாப் பொருளாகவும் இருக்கும் பகவானது தனித்தன்மையென்றபடி. ஸர்வாந்தராத்மா - எல்லோர்க்கும் உயிராய்ப் புகுந்துநின்று அவரவர்களைத் தத்தம் கருமங்களுக்குக்கேற்றபடி நியமிப்பவன். 'ஏஷ ஸர்வ பூதாந்தராத்மா - நாராயண:' (ஸுபாலோ-7) இந்த நாராயணன் ஸர்வப்ராணிகளையும் உட்புகுந்து தூண்டுமவன் என்றது காணத்தகும்.

**ஸ்வதஸ்ஸர்வவிதே ஸர்வசக்தயே**
**ஸர்வசேஷிணே ।**
**ஸுலபாய ஸுசீலாய வேங்கடேசாய மங்களம் ।। (6)**

(ப.) ஸ்வத: = இயற்கையாகவே, ஸர்வ விதே = எல்லாம் அறியுமவனும், ஸர்வ சக்தயே = எல்லாவிதமான சக்தியும் படைத்தவனும், ஸர்வ சேஷிணே= எல்லோரையும் குற்றவேல் கொள்ளுமவனும், ஸுலபாய = காண எளியவனும், ஸுசீலாய = நல்ல தன்மையுடையவனுமாகிய, வேங்கடேசாய மங்களம் = திருவேங்கடநாதனுக்கு மங்களம் உண்டாகுக.

(க.) பிரமன் முதலியோரின் வரத்தினாலல்லாமல் இயற்கையாகவே எல்லா அறிவும் ஆற்றலும் அமையப்பெற்று அப்பிரமன் முதலிய தேவர்களும் தனக்குத் தொண்டுபுரியுமாறு பெருமைபெற்றவனாய், இன்று அனைவர் கண்களுக்கும் இலக்காய் அனைவரோடும் கலந்து திருவேங்கடத்தில் வாழும் பெருமானுக்கு மங்களம் அனைத்தும் உண்டாகவேணும்.

(வி) ஒருவரின் அருள் காரணமாகவன்றி இயல்பாகவே எல்லாவற்றையும் அவ்வவற்றின் தன்மைகள் எல்லாவற்றுடனும் அறியும் அறிவும். எல்லாவிதமான ஆற்றலும் அமையப்பெற்றவனென்கிறார். 'ஸ்வதஸ் ஸர்வவிதே ஸர்வசக்தயே' என்றதனால் 'ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித்' (முண்ட 1-1-10) எல்லாப் பொருள்களையும் அறிந்தவன், அவற்றின் தன்மைகளனைத்தையும் அறிந்தவன் என்றதும், 'பரா அஸ்ய சக்தி: விவிதைவ. ச்ரூயதே' (ச்வேதாச்வ 6-8) இந்த பகவானுடைய மிகச்சிறந்த சக்தி பலவகைப்பட்டதாகக் கேட்கப்படுகிறது - என்றதும் காண்க. ஸர்வசேஷீ -எல்லோர்க்கும் தலைவன். ஸர்வசேஷித்வமாவது - உபயவிபூதியிலுமுள்ள சேதநாசேதனங்கள் எல்லாவற்றாலுமுண்டான விளையாட்டின்

பம் போகஸுகம் ஆகிய ஆனந் தமுடைமை என்று பெரியோர் பகர்வர். இப்படிப்பட்ட பெருமைபடைத்தும், பரம பதத்திலிருந்தால் தன்னை யாரும் அடையமுடியாதென்று நினைத்துத் திருவேங்கடமுடையானென்னும் அர்ச்சாவடிவம் கொண்டு திருமலையில் இருந்து அனைவர் கண்களுக்கும் தென்பட்டு ஸுலபனாயும் அவர்களோடு பேதமில்லாமல் கலந்து ஸுசீலனாயும் இருக்கிறானென்கிறது – ஸுலபாய ஸுசீலாய வேங்கடேசாய என்றதனால்.

பரஸ்மை ப்ரஹ்மணே பூர்ணகாமாய பரமாத்மநே ।
ப்ரயுஞ்ஜே பரதத்வாய வேங்கடேசாய மங்களம் ।। (7)

(ப.) பரஸ்மை ப்ரஹ்மணே = பரப்பிரம்மமானவனும், பூர்ணகாமாய = விரும்பிய எல்லாம் பெறுமவனும், பரம ஆத்மநே = ஆத்மாக்களில் மிகமிக உயர்ந்தவனும், பர தத்வாய = பரம்பொருளானவனுமாகிய, வேங்கடேசாய = திருவேங்கட நாதனுக்கு, மங்களம் ப்ரயுஞ்ஜே = மங்களம் உண்டாகுக என்கிறேன்.

(க.) எல்லாப்பொருள்களிலும் சிறந்து அனைத்துயிரினும் மேம்பட்டு, தான் விரும்பிய எல்லாவற்றையும் பெறுகின்ற நிறைவையுடைய பரப்பிரம்மரூபனாகிய திருவேங்கடநாதனுக்கு, சிறியேனான நான் மங்களாசாஸநம் செய்கிறேன்.

(வி) 'நாராயணபரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர:...ஆத்மா நாராயண: பர'; (நாராயணோபநிஷத்) என்றபடி நாராயணாவதாரமாகிய திருவேங்கடவன் பரப்ரஹ்மமென்றும் பரமாத்மாவென்றும் பரதத்வமென்றும் இதில் குறிக்கப்படுகிறான். உருவினாலும் அறிவு முதலிய பண்புகளாலும் பெரியவனாகி அப்பெருமையின் எல்லையிலே நிற்கும் நாராயணன் ப்ரஹ்மமெனப் படுகிறான். அவன் உண்மையில் உயர்ந்தவனாகையால் பரப்ரஹ்மமென்றும் வழங்கப்படுகிறான். அங்ஙனமன்றி ப்ரக்ருதிக்கும் முக்தாத்மாவுக்குப் ப்ரஹ்மமென்று பெயருள்ளதனால் அவற்றை விலக்குவதற்காக, பரம் என்ற விசேடணமிடப்பட்டது என்பாருமுளர். பரம் சிறந்தது. பரமாத்மா = ஆத்மாக்களில் உயர்ந்தவன். தத்வங்கள் - ப்ரமாணஸித்தமான சித் அசித் ஈச்வரன் என்னும் மூன்று பொருள்கள். பரமாத்மா = அவற்றுக்குள் உயர்ந்தவன் ஈச்வரனான நாராயணன்.

எப்பொருளையாசைப்பட்டாலும் அவ்வாசை பூர்ணமாகும்படியான - நிறைவேறும்படியான பெருமை பெற்றவனென்கிறது பூர்ணகாம: என்பதனால் அல்லது பூர்ணகாம: என்பதில் காம: என்பதனால், காம்யந்தே இதி காமா: என்ற வ்யுத்பத்தியின் வாயிலாக, விரும்பப்படும் பொருள்களான போக்ய போகோபகரண போகஸ்தானங்களைக்கூறி, அவற்றை இனி ஆசைப்பட்டு ஸம்பாதிக்கவேண்டாதபடி, ஏற்கெனவே இயற்கையாகத் தன்னிடம் நிறையப் பெற்ற அக்காமங்களையுடையவனென்று பொருள் கொள்ளுதலும் தகும். இது 'ஸத்யகாம:' (ச்சாந்தோக்யம் 8-7-1) நித்யமாக அமையப்பெற்ற எல்லாப் பொருள்களையுமுடையவன் என்பதனோடு சேரும். போக்யம் = சப்தாதி விஷயங்கள், பெண்கள் முதலிய அனுபவிக்கத்தக்க பொருள்கள். போகோபகரணம் = அவ்வனுபவத்திற்குக் கருவியான சந்தனம் தாம்பூலம் முதலியன. போகஸ்தானம் = அனுபவிப்பதற்குரிய இடமாகிய மாளிகை தோட்டம் மண்டபம் நடைவாவி முதலியன.



(தொடரும்)

# காலைப்பூசலும் மாலைப்பூசலும்

டாக்டர் K.A. மணவாளன் - சென்னை.

காட்டிற்குள்ளே சென்று கன்றுகளை நன்கு மேய விட்டுத் திருவாய்ப்பாடிக்குத் திரும்பிவருவான் கண்ணன். கார்க்கோடல் பூக்களைக் கூந்தலில் சூடியும் குழலூதியும் வரும் அக்கண்ணனின் அழகில் மயங்காதாரில்லை. சிலநாட்களில் பசுக்களையெல்லாம் பின்னேவரவிட்டுத் தான் முன்னே வேய்ங்குழல் ஊதி வருவான். வேறு பல நாட்களில் பசுக்களையெல்லாம் முன்னே போகவிட்டு, அப்பசுக்களால் எழுப்பப்பட்ட தூளிகளையெல்லாம் தன் உடம்பில் ஏறவிட்டுப் பின்னே வருவதுண்டு. சீர் மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமியர்களான பெண்கள் கண்ணன் வடிவழகைக் கண்டு களிக்கத் தங்கள் வீட்டுவாயிலிலே காலையிலும் மாலையிலும் கூடிவிடுவார்கள். சிலநாட்களில் கண்ணன் பசுமாடுகளின் முன்னே வராதபோது, அவனைக்காணுமல் கலங்கிப் படாதபாடுபடுவர். அப்பெண்கள் பட்டபாட்டையெல்லாம் நம்மாழ்வார் ஏறிட்டுக் கொண்டு நாயிகா பாவனையில் பேசுகின்ற திருவாய்மொழிப்பாடலுக்கு மாலைப் பூசல் என்று பெயரிட்டனர் பெரியோர். இதுபோல் காலைப்பூசலும் திருவாய்மொழியில் உண்டு.

தலைவனைப் பிரிந்த தலைவிக்கு, தென்றல் நிலா சந்தனம் முதலியபொருள்கள் மிகவும் விரக வேதனையைப் பெருக்குமன்றோ! இத்தென்றல் முதலானவை ஒவ்வொன்றுமே தனித்தனியே விரக வேதனையை மிகுவிக்கும். எல்லாம் ஒன்று சேர்ந்து வருத்தினால் கேட்க வேண்டுமா? தென்றல் மல்லிகை மலரின் பரிமளத்தையும் சேர்த்துக்கொண்டு வந்து தலைவியை வாட்டுகின்றது. இதுமட்டுமா? மேலும் வண்டுகளும் குயில்களும் குறிஞ்சிப் பண்ணை இசைத்துத் தலைவியின் விரகத்துக்குத் தூபம் போடுகின்றன. தென்றல் மேலே உடலை நலியவும் குறிஞ்சிப் பண் செவிவழிபுகுந்து உள்ளே வாட்டுகின்றன. என்செய்வாள் தலைவி! இதோடுவிட்டால் பரவாயில்லை. மாலைப்பொழுதும் வந்து மயக்குகிறது. மேகங்களும் நிறத்தால் அக்கண்ணனை நினைவூட்டுகின்றன. முழக்கி வருத்துகின்றன. இப்படிப் பட்ட நிலையில் அந்த ஆய்ப் பெண், முன்பு கண்ணனோடு கூடிய காலத்தில் அவன் அணைந்த தோள்களையும், மார்பையும் ஒற்றிய கண்களையும் கொண்டு எவ்வாறு ஆறித் தேறியிருக்க முடியும்? ஏங்கி இளைத்துவிம்மி அழுதாள். இக்கருத்தமைந்த பராங்குசநாயகியின் பாடலின் முழுவடிவினைக் காண்போம்:



மல்லிகை கமழ்தென்றல் ஈருமாலோ
வண்குறிஞ்சி இசைதவருமாலோ
செல்கதிர் மாலையும் மயக்குமாலோ
செக்கர்நன்மேகங்கள்
சிதைக்குமாலோ
அல்லியந்தாமரைக் கண்ணன்
எம்மான் ஆயர்கள்
ஏறரியேறெம்மாயோன்
புல்லிய முலைகளும்
தோளும் கொண்டு
புகலிடம் அறிகிலம் தமியமாலோ
-[திருவாய்மொழி 9-9-1]

மேலும் கண்ணனோ வரவில்லை. ஆனால் என்னை நலியும்பொருள்களெல்லாம் கூட்டாக வந்து வருத்துகின்றன என்கிறுள். மாலையில் வீடு திரும்பும் பசுக்களின் கழுத்தில் கட்டப்பட்டுள்ள மணிகள் ஒலிக்கின்றன. ஊது குழலோசையும் கேட்கின்றது. இவ்வுலகைப் படைத்துக் காத்து அளந்தவன் தன் கருணையினால் செயற்கருஞ்செயல்களைச் செய்த அக்கண்ணன் ஏனோ எனக்கு முகம் காட்டமறுக்கிறுன் என்று ஏங்குகிறுள் தலைவி. பிழைக்கும் வழியறியேன் என்று புலம்புகிறுள்.

இனி மற்றெரு விதத்தில் புலம்பும் நாயகியின் ஆற்றுமையைக் காண்போம். ஒரு காலத்தில் இத்தலைவியோடு கூடிக் களித்தவன்தான் அக்கண்ணன். அதனை நினைந்து பார்க்கிறுள் தலைவி. என்நுட்பமான இடை நுடங்கவும், மார்பு குழையவும், என்னோடு கலந்து என்னை முற்றிலுமாக உண்டவன் அம்மாயக் கண்ணன். இன்று ஏனோ என்னைத் தவிக்கவிட்டான். அவனுடைய செந்தாமரைக் கண்களும், செங்

கனிவாயும், கறுத்த குழலும், நான்குதோளும் என் நெஞ்சை விட்டு அகலாமல் நலிகின்றனவே என்று கண்ணீர் வடிக்கிருள்.

மேலும் அவன் வடிவழகு, பாவியேனாகிய என்னுடைய மனத்தே நின்று நலிகின்றது. குளிர்ந்த தண்வாடைக் காற்றும் நெருப்பையுமிழும் வெம்வாடையாயிற்று. குளிர்ந்த சந்திரனும் நெருப்பைக் கொட்டுகிருன். பூம் படுக்கையும் சுடுகின்றது. அக் கண்ணனை தெய்வவண்டு என் ஸாரமான அழகையும் அங்கங்களையும் கவர்ந்து உண்ட பின்பு இன்றுயான் வாடிய மலராய் விளங்குகின்றேனே என்கிருள். (எம்பெருமானிடத்தே ஈடுபட்டவர்க்கும் பெண்மையைக் காக்க முடியுமோ) என்பது கருத்து.

தலைவனாகிய அக்கண்ணன் இம்மட்டோடு நலியவிட்டால் பரவாயில்லை. மேலும் தன் தீங்குழலோசையால் மாளப்பண்ணுகிருன் என்கிருள் தலைவி. எனக்கு என் நெஞ்சம் துணையில்லை. அவனும் துணையில்லை. தோழிமாரும் துணையில்லை என்று அலமாப்புறும் பராங்குசநாயகியின் அல்லலுக்கும் எல்லையுண்டோ? இனி சிவனுக்கும் பிரமனுக்கும் திருமடந்தைக்கும் காப்பான அவன் திருவுடம்பு எனக்கு மட்டும் அரிதோ! என்று வினவுகிருள். மற்றும் அகிலும், சந்தனமும் பூவும் என்மேல் வீசப்படுகின்றன. யாழும் பஞ்சமராகத்தைக் கூட்டி என்னை நலிகின்றது. என்செய்வேன் என்கிருள்.

தலைவியை நலிவதில் மற்றவையெல்லாம் ஒரு தட்டாயும் அவனுடைய வேணுகானம் மாத்திரம் ஒருதட்டாயும் இருத்தலால் அதனைத் தனிப் பாசுரத்தில் வெளிப்படுத்துகிருள் பராங்குசநாயகி. அப் பாசுரத்தைக் காண்போம்.

'ஊதுமத்தீங்குழற்கேஉய்யேன் நான்,
அதுமொழிந்துஇடைஇடைத்தன் செய்கோலத்
தூதுசெய்கண்கள்கொண்டு ஒன்று பேசித்,
பேசித் தூமொழியிசைகள் கொண்டு
ஒன்று நோக்கி
பேதுறுமுகம் செய்து நொந்து, நொந்து
பேதைநெஞ்சு அறப்பாடும் பாட்டை
யாதுமொன்று அறிகிலம், அம்ம அம்ம
மாலையும்வந்தது மாயன் வாரான்
[திருவாய்மொழி 9-9-9]

உலகில் கண்ணுலே காண்பதும் இசைகளாலே பாடுவதும் இயல்பு. ஆனால் புல்லாங்குழல் ஊதும்போது கண்களைத் தூதுவிட்டு அவற்ருலே பேச ருன்; தூமொழி இசைகளை கொண்டு நோக்குகிருன். என் இவன் மாருன இயல்பு என் வியக்கிருள் தலைவி. இதனை "தூதுசெய் கண்கள் கொ டொன்று பேசி, தூமொ இசைகள் கொண்டு ஒன் நோக்கி" என்ற தலைவியி வரிகளால் உணரலாம். இப்ப யெல்லாம் ஆய்ப்பாடிப் பெ டிர் கண்ணன் வடிவழகை காண மாலையெல்லாம் காத் ருந்தும் அம்மாயக்கண்ணன் வ வில்லை. ஆனால் எருதுகளு பசுக்களும் அவைகளின் கழு தில் கட்டப்பட்ட மணிக ஒலிக்கும்படி வந்துகொண்டிரு கின்றன. பிரிந்தாரை நலிய அந்திமாலையும் வந்துவிட்ட மாயன் மட்டும் வரவில்லை இதனை 'மாலையும் வந்த மாயான் வாரான்' என்ற அ களில் உணர்த்தி மாலைப்பூச

# குன்றுகள் ஏழுடையானை வணங்குவோம்

திரு. வர்.பா. ரங்கநாதன் - வேலூர்.

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைப்
படர்பூமியில் மன்பதையுஞ் சீரடை
நன்மைகளை வேங்கடவன் ஈந்திடுவான்!
குன்றுகள் ஏழுடையானை வணங்குவோம்!

கிழக்கே கதிர் வான்மிசைத் தோன்றுகையில்,
முழங்கும்வேத இன்னொலி வான்எழுகையில்,
சென்ற உளவரும் காலங்களைச் சேர்க்கும்;
குன்றுகள் ஏழுடையான் புலமை போற்றும்!

விண்ணேகிட எண்ணும் மாமலைகள் மிசை
பண்பாடி மகிழ்ந்துவிரையும் காற்றலை
என்றுமியற்கையின் சாமரை வீசுமே!
குன்றுகள் ஏழுடையானைத் துதிக்குமே!

சந்திரகிரியின் வேந்தரே ஆண்டதைச்
சொந்தமென நாடிய வேங்கடவனை
"வடவேங்கடம் தென்குமரி ஆயிடை"க்
கடவுளாய்த் துதிப்பர் வேண்டிக்கிருபை!

என்று கொண்டாடும்படி பராங்குசநாயகி பாவனையில் நம்மாழ்வார் திருவாய்மொழியில் அருளியுள்ளார். இனி காலைப் பூசலில் சில அனுபவங்களைக் காண்போம்.

பொழுது புலர்ந்தது புள்ளும் சிலம்பின. குயில்கள் கூவின. மயில்கள் ஆலின. கண் விழித்தாள் அந்த ஆயர்குலநங்கை. புலம்பினாள், மெலிந்தாள். வெளுத்தாள். காரணம் என்ன? விடிந்தவாறே கண்ணன் மாடுமேய்க்கப் போய்விடுவானே என்ற கலக்கம்தான். அந்த ஏக்கம் அவளைப் பாடாதபாடு படுத்தியது.

'வேய்மருதோளிணை
மெலியுமாலோ!
மெலிவும்என்தனிமையும்
யாதும் நோக்கா
காமரு குயில்களும் கூவுமாலோ
கணமயிலவை கலந்தாலுமாலோ
ஆமருவினநிரைமேய்க்க நீ போக்கு
ஒருபகலாயிரம் ஊழியாலோ
தாமரைக்கண்கள் கொண்டு
ஈர்தியாலோ
தகவிலை தகவிலையே நீகண்ணா!

என்பது தலைவியின் காலைப்பூசல் பாடல் என்பர் பெரியோர். இப்படி அலற்றிப் பாடியது வேறுயாருமல்ல. பராங்குசநாயகிதான்.

உலகத்தாரைப் போலவா, நான் என்கிறாள் அத்தலைவி! என்ன வித்தியாசம்? என்றால் அவளே சொல்கிறாள். உலகத்தார் கணவன்மார்களைப் பிரிந்தால்தான் வருந்துவர். நான் கணவனோடு கூடியிருக்கவும் அவன் பிரிவேன் என்றாலே கண்ணீர் வடிப்பேன். வருந்துவேன் மெலிவேன் வெளுப்பேன் என்கிறாள்.

இப்படிக்கூறும் அத்தலைவியை நோக்கிக் கண்ணன் கேட்டான். ஏ, பெண்ணே! நான் இங்குதானே இருக்கிறேன். இன்னும் பசுமேய்க்கப்போகவில்லையே! அப்படியே போனாலும் நொடிப்பொழுதில் வந்துவிடமாட்டேனா! ஏன் புலம்புகிறாய் என்றான். அதற்கு அத்தலைவி பிரிவு உனக்கு ஒருநொடிப்பொழுது என்றாலும் எனக்கு அது ஆயிரம் ஊழிக்காலமல்லவோ என்றாள். இப்படியும் ஒரு காதலா என்று வியந்து அவளை மகிழ்விக்கக் கண்களால் குளிர நோக்கினான். அந்த நோக்கும் அவளுக்கு ஏலாதாயிற்று. கண்ணா! நீ அப்படிப் பார்க்காதே. என்னை நீ கண்ணாலே உற்று நோக்கிக் கொலை செய்வதிற் காட்டிலும் பிரிந்து போவதே நன்று என்றாள். இப்படிச் சொன்ன பின்பும் அக்கண்ணன் அவளுடைய அங்க அழகுகளை நோக்கி ரஸிப்பதை விடவில்லை. அப்போது அவள் இது தகாது இது தகாது என்று ஒதுங்கிச் சென்றாள்.



நீ பெண்ணின் வருத்தமறியாதவன். உன் தாயுன்னை வேம்பேயாக வளர்த்துவிட்டாள். தருமம் அறியாத குறும்பனல்லவோ. நீ என்றாள். இப்படி ஆற்றாமையால் வருத்தியலற்றிய பராங்குசநாயகியின் காலைப்பூசலில் தான் எத்தனை அழகு காண்கிறது. பாடலின் சில வரிகளைக் காணீர்.

'வேய்மருதோளிணை
மெலியுமாலோ!
மெலிவும் என்தனிமையும்
யாதும் நோக்கா
காமரு குயில்களும்கூவுமாலோ
கண-
மயிலவை கலந்து ஆலுமாலோ
..............தகவிலை தகவிலையே நீ
கண்ணா! -[திரு. 10-3-1]

இனி மற்றொரு பாடலின் அனுபவத்தைக் காண்போம்.

பிரிவை நினைத்துப் புலம்பும் நாயகியின் தன்மை கண்டு அவளை ஒருவாறு தேற்றி, அவள் வருத்தம் தீரும்படி, ஆரத்தழுவிக்கொண்டான் கண்ணன். ஆனால் அவள், இவன் பிரிவதற்கன்றோ நம்மை ஆரத்தழுவுகிறான் என்று அவன் வஞ்சனை எண்ணத்தை அறிந்து கதறி அழுதாள். என் ஆவியின் பரமல்ல வேட்கை; அந்தோ என்றாள். என் ஆவியைக் கொள்ளை கொள்வதோடு ஏதேதோ செய்கின்றது என்று மீண்டும் அழுதாள். இரக்கம் கொண்ட கண்ணன் பெண்ணே! உன் வருத்தம் தீர என்ன செய்யவேண்டும் என்று கேட்டான். 'வீவநீ பசுநிரை மேய்க்கப்போக்கே' என்றாள். அதாவது இதற்கு முன்பெல்லாம் நீ என்னைப் பிரிந்து போனாலும் இனி மேலுள்ள காலமெல்லாம் என்னைப் பிரிந்து நீ பசுமேய்க்கப்போகக்கூடாது என்றாள்.

மேலும், கண்ணா! அடிச்சியோங்களான எங்களை நீ ஒருபோதும் பிரியலாகாது. உனக்கு நாராயணன் என்ற பெரிய பெயருண்டு. அதை மறந்து கோவிந்தன் கோபாலன் என்னும் சில பெயர்களை ஆசைப்பட்டு இங்கு வந்தாய். அப்பெயர்களுக்கு ஏற்ப இப்போது எங்களைப் புறக்கணித்துவிட்டு, அப்பசுமாடுகளை விரும்பி கொடிய வெங்காட்டுக்குக் காலடி நோவச் செல்கிறாய்! நீ காட்டுக்குப் போனால் எங்கள் கதிஎன்ன? என்று கேட்டாள். அதற்கு விடையாகக் கண்ணன் சொன்னான். பெண்ணே! நான் காட்டுக்குச் சென்றாலும் உடல் அங்கும் உயிர் இங்குமல்லவா இருக்கும் என்றான். உடனே அப்பெண், கண்ணா! இத்தகைய சாமர்த்தியமான பேச்சுக்களால் என்னை மயக்காதே. நான் தாள மாட்டேன். "நின் செங்கனிவாயின் கள்வப்பணிமொழி நினைதொறும் ஆவி வேமால்" என்றாள்.

மேலும் கண்ணா நின்பிரிவாலே நான் வெந்து நோவ, வளைகளும் மேகலையும் கழன்றுவீழ, கண்கள் நீர்மல்க, மேனி பசலைநிறம்கொள்ள, தோள்களும் வாட இப்படியெல்லாம் என்னைமுற்றிலும் அழியும்படிபண்ணி நீபசுமேய்க்கப்போகக்கூடாது. நான் என் மென்மையான கைகளாலே பிடித்தாலும் கன்றிச்சிவக்கும் உனது மிருதுவான திருவடிகளைக் கொண்டு காடுமேடெல்லாம் நடக்கலாமோ? பசுக்களை மேய்க்கும் விருப்பத்தினால், அவை போகுமிடமெல்லாம் போய்த்திரிந்து அலைவாயன்றோ! இது தகுமோ! முறையோ! என்பிராணநாதனான நீ ஒருபோதும் கன்று காலிகளின் பின்போகாமல் என் கண்களுக்கு விருந்தாகக் கோலம் செய்து இங்கேயே என் கண்வட்டத்திலேயே இருக்கவேண்டும் என்று வேண்டினாள்.

மேலும் கண்ணா நீ பசுமேய்க்கப்போனால் வழியில் உன்னைக் காண்பார், கண் எச்சில் பட்டு உன் அழகுக்குத் தீங்கு உண்டாகும். கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களாலும் ஆபத்து விளையும் என்று வழிமறித்தாள். அப்போது கண்ணன் உன் அன்புக்குக் கட்டுப்பட்டு இனி பசுமேய்க்கக் காடு செல்லமாட்டேன் என்றான். அதோடு ஒரு கபட சிரிப்பையும் உதிர்த்தான். அவன் சிரிப்பைக் கண்டு ஆய்ப்பெண் நம்பாமல் மறுபடியும் அவனிடம் ஒன்று கேட்டாள். செங்கனிவாய் எங்கள் தேவே! அடிவீழ்ச்சி விண்ணப்பம். 'திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி' என்றாள். கண்ணா நீ சிரித்தே எங்கள் குடியைக் கெடுக்கப் பார்க்கிறாய். உன்னால் பசுவைப் பிரிந்து ஒரு நொடிப்பொழுதும் இருக்கமுடியாது என்பதையான் அறியேனோ! உனக்குப் பரமபதத்தில் இருப்பதைக் காட்டிலும் பசுமேய்க்கையிலன்றோ மிக விருப்பம். நீ போகாதிருப்பாயா? என்று புலம்பினாள்.

இப்படி ஜகன்மோகன மங்களாகாரமான கண்ணன் திருமுகத்திலும் திருமேனியிலும் வைத்த கண் வாங்காமல் அவனை அனுபவிக்கத் தலைப்பட்ட ஆயர்பாடிப் பெண்கள் நிலையை அநுசரித்துப் பாடின ஸ்வாமி நம்மாழ்வாராகிற பராங்குசநாயகியின் காலைப்பூசல் மாலைப்பூசல் பாசுரங்களைப் படிப்பவர்கள் அவ்வாய்ச்சியர்கள் போல் அல்லல்படாமல் அக்கண்ணனோடு கூடிப் பேரின்பமடைவார்கள் என்பது திண்ணம்.

*

## மோட்சம்

ஜீவாத்மாக்களாகிய நாம் இந்த உலகத்தின் எல்லா சுகங்களையும் அநுபவித்த பின்பு இனிப் பிறவாத மோட்சநிலைக்குச் செல்வோம். அனைவரும் இந்நிலைக்குச் சென்றுதான் தீரவேண்டும். ஆயினும் சிலர் சீக்கிரமாகவும் பலர் தாமதமாகவும் செல்வர். ஈரேழு பதினான்கு உலகங்களிலும் புல், பூண்டு, மரமாகத் தோன்றி, மீன், ஆமை, மாடாகப் பிறந்து பூமியில் மனிதர்களாகப் பிறந்து இன்னும் மற்ற உலகங்களில் வெவ்வேறுவிதமாகப் பிறந்து பிறவிதோறும் ஆயுள் அதிகரிக்கப்பட்டுப் பின்பு 14-ஆம் உலகமாகிய சத்ய லோகத்தில் பிறந்து மிக நீண்ட ஆயுளைப் பெற்றுப் பின்னர் மோட்சம் அல்லது முக்தியைப் பெறவேண்டும்.

இந்த மோட்சம் நான்கு வகைப்படும். சாலோக்யம் - பகவானின் உலகம் அடைதல். சாரூப்யம் - பகவானின் ரூபத்தைப் பெறுதல். சாமீபம் - பகவானின் சமீபத்தில் இருத்தல். சாயுஜ்யம் - பகவானுடன் ஐக்யம் அடைதல்.

தொகுத்தவர் : ஆர். ராஜலக்ஷ்மி - திருச்சி.

இறையுணர்வு இல்லாமல் இரையை (உணவை) மட்டும் உண்டு வாழ்வது மனித வாழ்வாகாது. அதனால்தான் இரையைத் தேடுவதோடு இறையையும் தேடு என்கின்றனர். இரையைத் தேடுவதோடு சிலர் நின்றுவிடுகின்றனர். உயிர் வாழ உணவு. இது எல்லா உயிர்களுக்கும் பொது. ஆனால் மனிதன் உயிர்நலம் பெற உயிர் வாழ்க்கை நலம் பல பெற்றுச் சிறந்திட இறைவழிபாடு மிக மிக இன்றியமையாதது. கடவுள் வழிபாட்டினால் சாதிக்க முடியாதது ஒன்றுமில்லை என்பது அறிஞர் கண்ட முடிவு.

இந்த உலகம் இயங்குவது அதிலுள்ள உயிர்களின் அமைப்சிகள் என்பார்கள். இயற்கை என்பது யாது? தானாகவே தோன்றுவது என்பார்கள. தானாகவே தோன்றிய இறைவனையும் இயற்கை என்பார்கள். இறைவனும் இயற்கையும் வேறல்ல. இரண்டும் ஒன்றே. The nature is God's Art.

அந்தக் கடவுளை சூரியன் தன் கிரணங்களாகிய கைகளால் தொழுகின்றான். பறவைகள் எல்லாம் தன் இனிய குரலால் பாடி ஆடுகின்றன. கடல் அலைகளாகிய தன் கைகளால் கடவுளைத் தொழுகின்றது. பஞ்ச பூதங்களும் தன் செயல்களால் கடவுளைத் தொழுகின்றன. ஆனால் மனிதன் மட்டும் கடவுளைத் தொழ

நிலைகளுண்டு. அவையாவற்றுள்ளும் மிக எளிமையானதும் சுலபமாக எல்லோரும பின்பற்றக்கூடியதுமாக இருப்பது நாம சங்கீர்த்தனமாகும். வள்ளுவர் கூறியது போல பற்றற்ற ,இறைவனைப் பற்றிக்கொண்டு, அருணகிரியார் சொல்லியது போல "பக்தியால் யானுனைப் பலகாலும் பற்றியே மாதிருப்புகழ்பாடி" போற்றல் வேண்டும். பக்தி வழியிலே எளிமையானது ஆண்டவன் புகழ் பாடுதலாம். பாடவ்ராதவர்கள் என்ன செய்யலாம் எனில் பக்தர்களின் கூட்டத்திலே சேர வேண்டும். பாடத்தெரியாதவர்கள் பலர் ஐயப்ப பக்தர்களின் கூட்டத்திலே சேர்ந்து பாடுவதைக் கண்முன்னால் பார்க்

# கீதகோவிந்தம்

வித்வான். வி. சுப்பிரமணியன் - உடுமலை.

பும் அசைவும் ஒருவகை சக்தியாலேயேகும். அந்தச் சக்தி தான் கடவுள் என்னும் சக்தி. அதனை 'ஆதிபகவான்' என்றார் வள்ளுவர். அந்த இறைமை சக்தியே உலகத்திற்குத் தலைவன் என்றார். 'ஆதிபகவன் முதற்றே யுலகு' என்றார். 'தெய்வந் தெளிமின்' தெய்வத்தை உண்டென்று அறிந்து கொள்ளுங்கள் என்றார் இளங்கோவடிகள். சூரியனும் சந்திரனும் தோன்றுவதும் மறைவதும் யாராலே? மழை பொழிவதும் மின்னல் இடி உண்டாவதும் யாராலே? எல்லாம் அந்தக் கடவுளாலே தான் என்று நினைக்கத்தோன்றும். கடவுள் என்ற சொல்லை மறந்தவர்கள் எல்லாம் இயற்கை நிகழ்ச்

மறக்கின்றான். "மனமே, நீ கடவுளைத் தொழ மறப்பதேன்" என்ற கவிஞனின் பாடலும் இங்கு நோக்கத்தக்கதே. இவ்வாறாக இயற்கைப் பொருள்களெல்லாம் கடவுளைத் தொழும் போது மனிதன் அறிவு வரத் தொடங்கிய இளமைப் பருவத்திலிருந்தே ஏன் தொழக் கூடாது? எனவே இளமைப்பருவத்திலிருந்தே கடவுளைத் தொழவேண்டும் என்பதாம். "இளையம் யாம் எனக் கருதல் வேண்டா" என்றார் நாலடியார் பாடிய சமண முனிவர்.

இவ்வாறாகக் கடவுளை வழிபட பலவழிகள் உண்டு. அவைகளில் சிறந்தது பக்திமார்க்கமாகும். பக்தி மார்க்கத்திலும் பல

கின்றோமல்லவா? புகழ் பாடுவதிலும் கடவுளின் பலநாமங்களைச் சொல்லி பக்தியுடனும் ஓரளவு இசையுடனாவது பாடுவது சாலச்சிறந்ததாகும்.

இந்தக் கலியுகத்தில் பாவங்கள் நிறைந்த மக்களுக்குப் பாவ மன்னிப்புத் தந்து நன்மையை அருளுவது பகவன் நாம கீர்த்தனமே. "கலௌ கல்மஷ சித்தானாம் பாபத்ரவ்யோப ஜீவினாம் விதிக்ரியா விஹீனானாம் கதிர் கோவிந்த கீர்த்தனம்' ' என்றார் பெரியோர். இதனால் கோவிந்த கீர்த்தனமே சர்வ தீமைகளையும் (பாவங்களையும்) போக்கி ரக்ஷிக்கக்கூடியது என்பதறிந்தோம்.

ஒருவன் காசி க்ஷேத்திரத்தில் கர்ப்ப வாஸமான பத்து

மாதம் அல்லது பலகாலம் வாழ்ந்து க்ரஹண காலங்களிலும் மற்ற காலங்களிலும் கோடிக்கணக்கான கோதானங்களைச் செய்தாலும் யக்ஞயாகாதிகளைச் செய்தாலும் சொர்ண தானம் முதலிய தானங்களைச் செய்தாலும் கோவிந்த கீர்த்தனம்பாடி பஜனை செய்வதற்குச் சமம் ஆகாது.

கோடி கோடி தானம் க்ரஹணேஷு காசி
ப்ரயோக கங்காயுத கல்பவாஸ: ।
யக்ஞாயுதம் மேரு ஸ்வர்ண தானம்
கோவிந்த கீர்த்தே: ந ஸமம் ஸ்தாம்ஸே ।।

மற்றும் ஹரி கீர்த்தனம் நடக்கும் இடத்திலும் பஜனை பாகவதர்களிடமும் யமன் வரமாட்டான். "யமஸ்ய கருணாநாஸ்தி கர்த்தவ்யம் ஹரி கீர்த்தனம்" என்பது பக்தரின் வாக்கு. இப்படிப்பட்ட சிறப்பு வாய்ந்த நாம ஸங்கீர்த்தனமாகிய பஜனை என்பது யக்ஞம் போலும், தபஸ் போன்றதுமாகும். எத்தனையோ பாகவத உத்தமர்கள் நம் நாட்டில் இடைவிடாத நாம ஸங்கீர்த்தனத்தை நடத்தி வந்துள்ளனர்; வருகின்றனர்.

பகவன் நாம கீர்த்தனைகளைப் பாடும் பஜனைக்கு அஷ்டபதி எனப்படும் கீத கோவிந்தம் ஜீவன் போன்றது. கீத கோவிந்தம் இருபத்து நான்கு பாடல்களையுடையது. இருபத்து நான்கு அக்ஷரங்களையுடைய காயத்ரி மந்த்ரம் போல சக்தி வாய்ந்ததாக இருபத்து நான்கு பாடல்களால் பாடியுள்ளார். ஸ்ரீகிருஷ்ண பகவான் ராதையை கல்யாணம் செய்துகொள்ள இருபத்து நான்கு வயதுடைய யௌவன புருஷனாக வடிவெடுத்ததால் இருபத்து நான்கு கீர்த்தனங்கள் பாடினார் என்றும் கொள்ளலாம். ஒவ்வொரு பாடலிலும் எட்டு கண்ணிகள் (இரண்டடிப்பாடல்) இருப்பதால் அஷ்டபதி எனப்பட்டது. அஷ்டபதி- அஷ்ட பதிகம் உடையது என்பது பொருள். பதிகம்-பாடல். ஸ்ரீகிருஷ்ண பகவான் அஷ்டமியில் எட்டாவதாகப் பிறந்ததால் அவரைப் பாடிய கீர்த்தனமும் அஷ்டபதி எனப்பட்டது. எட்டினாலும் கிடைக்காத பரம்பொருளாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் நமக்கெல்லாம் எட்டும் பொருளாக எட்டில் தோன்றினார். எட்டுப் பதிகமாகிய அஷ்டபதி நாம் பெற்ற பெருஞ்செல்வமாகும். ஸ்ரீகிருஷ்ண பகவானின் அன்பும் அருளும் தரும் அஷ்டபதிக்கு நிகர்வேறெதுவும் இல்லை.

இந்த அஷ்டபதியாகிய கீத கோவிந்தத்திற்கும், பகவத்கீதைக்கும் சம்பந்தமுண்டு. பகவத்கீதை ஸ்ரீகிருஷ்ண பகவானால் மனிதனுக்குச் சொல்லப்பட்டது. கீதகோவிந்தம் மனிதனால் பகவானுக்குச் சொல்லப்பட்டது. பகவானுக்குச் சொல்லப்பட்டது என்றால் பகவானின் புகழை, கல்யாண குணங்களைச் சொல்லவது என்று பொருள் கொள்ள வேண்டும். இத்தகைய கீத கோவிந்தமாகிய அஷ்டபதியை ஒரிஸ்ஸா மாநிலத்தில் கிந்து பில்வம் என்ற ஊரில் பிறந்த ஸ்ரீஜயதேவர் என்பவர் பாடியுள்ளார். அவரே தாம் பிறந்த ஊரை "கிந்து பில்வ ஸமுத்ர ஸம்பவ ரோஹிணீ ரமணே" "ஸமுத்திரத்திலிருந்து தோன்றிய சந்திரன் அழகிய கிந்து பில்வமென்னும் ஊரை மகிழ்விப்பது போல" என்று கூறியுள்ளதிலிருந்து அறியலாம். ஸ்ரீஜயதேவரை ஸ்ரீவேதவ்யாஸரின் அவதாரம் என்பர். ஜயதேவர் ஸ்ரீகிருஷ்ண பகவானின் அனந்த கல்யாண குணங்களை ஸ்ரீராதாகல்யாணத்தின் மூலம் நம்மவர்க்கு எடுத்துரைக்கிறார். இது ஸ்ருங்கார மஹாகாவியமாகும்.

கல்யாணம் என்ற சொல்லுக்கு ஒன்று சேர்தல என்பது பொருளாகும். ஸ்ரீராதா கல்யாணம் என்றால் ராதையும் கிருஷ்ணனும் ஒன்றுகின்றனர் என்பதாகும். தோழியாகிய குருவின் உபதேசத்தைக் கொண்டு ஜீவாத்மாவாகிய ராதை பரமாத்மாவாகிய கிருஷ்ணனோடு ஒன்றுபடுதலே கல்யாணமாகும். ஸ்ரீராதா கல்யாணம் என்று பஜனை பூர்வமாக நாம் கொண்டாடி வருகின்றோம். ஸ்ரீராதாகல்யாணம் நடைபெறும் இடங்களில் நன்மையே பெருகும் என்பது திண்ணம்.



## ஸ்ரீரெங்கநாதன் காவிரிக்கரையில் சயனம் செய்த மூன்று தலங்கள்

| | | |
|---|---|---|
| ஸ்ரீரெங்கப்பட்டிணம் | - | ஆதிரங்கம் |
| சிவசமுத்திரம் | - | மத்தியரங்கம் |
| ஸ்ரீரெங்கம் | - | அந்தியரங்கம் |

பார்சன செ. ரமேஸ் - மதுரை.

Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D. Press by M. Lakshman Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

